

# மதீனாக் கலம்பகம்

அதிராம் பட்டினம்

ஜவரத்தின கவிராஜர்

சையிது மீறுலெப்பை அண்ணாவியார்

அதிராம்பட்டினம்

"ஜீவரத்தின கவிராஜர்"

சையிது மீரு லெப்பை அண்ணாவியார்

அவர்கள் இயற்றிய

# மதீனக் கலம்பகம்


பதிப்பாசிரியர் :

ஹாஜி. க. செ. சையிது முஹம்மது அண்ணாவியார்

வெளியீடு :

புலவர் அ. அஹ்மது பஷீர் எம். ஏ. பி. எட்.

சிங்கைப் பதிப்பகம்

23, கரீம் சுபேதார் தெரு

உமறுப் புலவர் நகர் (ஐஸ் அவ்ஸ்)

சென்னை-600 014

.ரிமை : ஹாஜி கே. எஸ். செயிது முஹம்மது
அலைஃவியார்

தற் பதிப : ஹிஜ்ரி, 1313. ·பிஉல் கிர்
(மன்மத ஆண்டு) 1895

புதிய இரண்டாம் பதிபபு : ஹிஜ்ரி, 1404 ப்ரல், 1984

பக்கங்கள் : – 20 + 68 = 88

கிடைக்குமிடங்கள் :

அலைணவியார் பதிப்பகம்
29 B, அலைணைவ்யார் தெரு,
அதிராம்பட்டினம்.

எஸ். வாவுப பிள்ளை,
புத்தக வியாபாரம்,
10, கடைத் தெரு,
அதிராம்பட்டினம்.

பிலால் பதிப்பகம்,
20-C, பெரிய நெசவுத் தெரு,
அதிராம்பட்டினம்.

சிங்கைப பதிப்பகம
23, கரிம் சுபேதார் தெரு,
சென்னை-14.

விலை: ரூ. 5-00

அச்சிட்டோர் : லிப்ஸீக் பிரிண்டர்ஸ், சென்னை, 600 014.

இஸ்லாமியத் தமிழ் வாவார்பா பேரறிஞரும், சீறாப் புராண விரிவுரையாளருமாகிய, டாக்டர், கலைமாமணி, கவி, கா. மு. ஷெரீப் அவர்கள் அளித்த

# அணிந்துரை

பாட்டுடைத் தலைவரைப் பலவகை பாப்பில் பாப் னந்து சிறப்பிப்பது கலம்பகம்.

யாப்பினைப் போன்றே பகுப்பிலும் பல பகுப்பு இதில் உண்டு.

புய வகுப்பு, மதங்கு, அம்மானை, காலட, சம்பிரதம், கார், தவம், குறம், பாண், களி, சித்து, இரங்கல், கைக்கிளை, தூது, வண்டு, தழை, ஊசல், மறம் ஆகிய பதினெட்டு அங்கம் உண்டு கலம்பகத்தில். இவைகட்கும் மேலாக, நூலிற்கு முகவணியாய் கவி உறுப்பாக வெண்பாவும் கலித் துறையும் துவக்கமாகி நிற்கும். இன்னும்,

பதினெண் பகுப்புக்களின் உள் அங்கமாக, பிச்சியார், கொற்றியார், இடைச்சியார், வலைச்சியார் போன்ற மேலும் பல உறுப்புக்களும் புலவரின் விருப்பிற்கேற்ப அமைவதும் கூடும். இப்பகுப்புக்களை,

மருட்பா, ஆசிரியப்பா, கலிப்பா, ஆசிரியவிருத்தம் கலி விருத்தம், கலித்தாழிசை, வஞ்சி விருத்தம், வஞ்சித் துறை போன்றவற்றால் பாடிடல் வேண்டும். மேலும் இந்த யாப்புகளிடையே வெண்பாப் பாடல்களும், கலித்துறைப் பாடல்களும் மடக்குகளும் விரவி வந்திடல் வேண்டும். அவை மட்டுமின்ற,

அனைத்துப் பாடல்களும் செப்பலோசைச் சிதைவின்றிச் சந்தப்பாக்களாதல் வேண்டும். புலவரின் புலமை ஆற்றலை வெளிப்படுத்துவதாக அமைவது கலம்பகம்.

கலம்பகம் பாடாக் கவிஞனைக் கால் கவிஞன் என்பது பழங்காலப் பழமொழி.

கலம்பகம் பெரும்பாலும் சிற்றின்பச்சுவையை மிகுத் தளிப்பதாக அமைவது வழக்காறு.

பால் உணர்வைத் தூண்டுகின்ற வகையில் எண்ணு வதையோ, எழுதுவதையோ, பேசுவதையோ இஸ்லாம் அனுமதிப்பதில்லை.

அகத்தாலும் புறத்தாலும் தூய்மையுற்றுத் திகழ்வதே இஸ்லாம்.

எனவே, இவற்றை வலியுறுத்துகின்ற வகையில் இஸ்லாமிய எழுத்தாளர்களின் எழுத்துக்கள் அமைந்திடுதல் வேண்டும்.

இந்தக் கண்ணோட்டத்தில் மதீனக் கலம்பகத்தை நான் அணுகினேன்.

மற்ற சமயம் சார்ந்த புலவர்கள் படைத்தளித்துள்ள கலம்பதினும் இது பொருளுரைப்பில் மாறுபட்டிருப்பதைக் கண்டு மகிழ்ந்தேன்.

இஸ்லாமிய நெறி புரளாது கலம்பகம் பாடிட முடியும், பாடிய நமது முன்னோர்கள் உண்டு என்பதை அறிந்து உள்ளம் பூரித்தேன்.

சொல், அணி, யாப்பு போன்ற இலக்கணவரம்பு நெறி வழுவாது சுவைபட, தாளலயம் தவறிடாத சந்தத்துடன் பாடல்கள் தூய்மையுடனும் துலங்கிடக் கண்டேன்.

இத்தகு சிறப்புடைய ஒரு தமிழ்க் கவிஞரை, இஸ்லாமிய ஏந்தலை இத்தமிழகம் அறிந்திருக்கவில்லையே என எண்ணி அலமந்தேன். யா அல்லாஹ்! எத்துணை பெரிய

கவி ஆற்றலை இஸ்லாமிய ஷரஃ* அறி ஆற்றலை இந்த ஜீவ ரத்னக் கவிஞருக்கு அளித்திருக்கிறாய்! வல்லமை மிக்கவனே! புகழ் அனைத்தும் உனக்கே; உன் ஒருவனுக்கே!

செல்லிமா நகர் என்கின்ற அதிராம்பட்டினத்திற்குப் பல சிறப்புகள் உண்டு.

தமிழகத்திற்குள் இஸ்லாம் புகுந்த அடிநாளிலிருந்து அதிராம்பட்டினத்தில் முஸ்லிம்கள் இருந்து வருகின்றார்கள்.

பல ஆலிம்களைப் படைத்தளித்த நகரம்.

எண்ணிறந்த இஸ்லாமிய ஞானவான்களை ஈந்தளித்த நகரம்.

தமிழகத்தில் உள்ள இஸ்லாமிய ஞானக் கோட்டைகளில் ஒன்று அதிராம் பட்டினம்.

உலகியல் கல்வியைப் போதிக்கின்ற கலாசாலை மட்டுமின்றி, இஸ்லாமியக் கல்வியைச் செவ்வனே வழங்கிடும் கல்விக் கூட்டங்கள் பலவற்றோடு அக் கலாசாலையும் துலங்கிடும் நகரம் இது.

இங்கே தொன்மைக் காலமாக வணிக வாழ்வினர் மட்டுமின்றி வளங்குன்றாப் புலவர்களும் உண்டு.

இத்தகு புலவர் குடும்பங்களில் 'அண்ணாவியார்' குடும்பம் என்கின்ற பரம்பரைப் புலவர் குடும்பமும் ஒன்று.

இக்குடும்பத்தைச் சார்ந்த பல மேன்பாட்டுப் புலவர்களுள் ஒருவரே ஜீவரத்னக் கவிராயர்.

இவர்தம் இயற்பெயர் சைய்யிது மீரா லெப்பை என்பதாகும்.

இவர் ஓர் அருட்கவிஞர். பல நூற்களை யாத்தளித்த ஆற்றல் மிக்கவர். உயிருள்ள பல உயர் தமிழ்க் காவியங்கள் படைத்ததால் நாட்டவர் இவரை ஜீவரத்னக் கவி என்றனர்.

---

* ஷரஃ :— மார்க்க நடைமுறை விளக்கம்

இந்த மதீனக் கலம்பகம் மட்டுமின்றி, மகுடி நாடகம், மனே அலங்காரம், வாள்விருத்தம், பரிவிருத்தம், யானே விருத்தம், வாட்சாராவுத்தர் பவனி...போன்ற பல காவிய நூற்களேப் படைத்தவர் இவர்.

இந்நூற்களுள், மகுடிநாடகம் தமிழிற்கோர் புது ஆரம் ஆகும். சமயம் சார்ந்த கதாபாத்திரங்களேக் கொண்டதாயினும் சமயச் சார்பற்ற பொதுக் கலே விளக்க நூல்.

இந்த நூற்களில் தலேயாயது மதீனக்கலம்பகம்.

"காவியம் பலபாடிப்பின் கலம்பகம் பாடுக என்பர்"

யாப்பில், தமிழறி ஆற்றலில், சுவைபடச் சொல்லலில், தாளலயம் தட்டாது பாடலில் இஸ்லாமிய வரலாற்றில் எத்தகு சிறப்பு வாய்ந்த சீரியர் இந்த ஜீவரத்னக் கவிராயர் என்பதை மதீனக் கலம்பகத்தைப் படித்த எவரும் உணருவர். இவர் இசைக்கின்ற பக்கமெல்லாம் தமிழ் இயைந்தோடி வருகின்றது.

கலம்பகம் முற்றிலும் அந்தாதித் தொடையில் அமைந் திடல் வேண்டும். அவ்வாறே இம்மதீனக் கலம்பகம் தோற்றமளிக்கின்றது.

கலம்பகம் பாடுங்கால் இன்னருக்கு இத்தனேப் பாடல் கள் என்கின்ற கணக்கு உண்டு,

தேவர்க்கு நூறு.
அந்தணர்க்குத் தொண்ணூற்றைந்து.
அரசர்க்குத் தொண்ணூறு.
அமைச்சர்க்கு எழுபது.
வணிகர்க்கு ஐம்பது.
வேளாளர்க்கு முப்பது.

இவை பாட்டின் எண்ணிக்கை. இந்த அடிப்படையில் வானவர் கட்கும் (தேவர்கள்) தலேவராகத் திகழ்கின்ற அண்ணல்

நபி (ஸல்)அவர்கள் மீது பாடப்பட்டுள்ள இந்த மதீனக் கலம்பகத்தில் 101 பாடல்கள் (நூல் நுவல்தலில்) உள்ளன.

மருட்பா, ஆசிரியப்பா, கலிப்பா, ஆசிரிய விருத்தம். கலி விருத்தம், கலித்தாழிசை, வஞ்சி விருத்தம், வஞ்சித் துறை, வெண்பா, கலித்துறை, மடக்கு ஆகிய யாப்புகளில் ஆன பாடல்களே யன்றி,

திரிபங்கி (ஒரு பாட்டினுள் மூன்று பாடல் வருவது), பஞ்ச பங்கி (ஐந்து அமைவது), வேற்றொலி வெண்டுறை, உயிர் வர்க்க அகவல், சதுரங்கக் கலித்துறை, சதுரங்க வெண்பா போன்ற வேறு பல யாப்புகளில் அமைந்த பாடல்களும் இந்த மதீனக் கலம்பகத்தில் காணவியல்கின்றது.

இந்த யாப்புகளையெல்லாம் கற்றிட எத்தனை காலம் செலவிட்டிருக்க வேண்டும்? இந்த யாப்புகளில் சரளமாகப் பாப்புனைந்திட எத்தனை ஆண்டுகள் எழுதிப் பழகி இருத்தல் வேண்டும்? எத்தனை ஆசிரியர்களின் பாடல்களைப் பயின்று தேறியிருக்க வேண்டும்?

பள்ளிக்குள் நுழைந்திடுமுன் பாடல் எழுதிட விழைந்திடுங் காலமிது. இக்கால இளைஞர் இந்த நூலினைப்படித்தால்?......படிப்பார்களா?

"அன்னையாய் எவர்க்கும் முன்அமைந் தவரை
ஆதிநா யகன்றன் தூதரா னவரை
இங்கித மறையின் துங்கனே ரினரை
ஈமான் நிறைந்தொளி ஆமா னவரை
உடுத்தரித் தவரைக் கடுப்பொசித் தவரை
ஊமை வாய் உரைக்க நேர்மைசெய் தவரை
எண்ணு நன் மதினத் தண்ணலா னவரை
ஏகாம் பரரை வாகாம் புயரை
ஐயர்கள் பணியும் செய்யதா ளினரை
ஒப்பிலா தவரைச் செப்பமாய்ப் புகழை

ஓதுவார் துயரம் யாதுமே விலகும்
'ஔவலாய்' 'ஆகிருய்' ஆகினுர் தமையே''

இப் பன்னிரு அடிகளின் தலே எழுத்தாய் அமைந்திருத்தல் 'அ' முதல், 'ஔ' வரையான உயிரெழுத்தாதலின் இவை உயிர்வருக்க அகவல் எனக் கொள்ளற் பாலதாயின.

'......தமிழ்மது ரையிலொரு குமரியை மருவு
சவுந்தர மாறர் தடம்பொற் புயங்களே''
(மதுரைக் கலம்பகம்—புயவகுப்பு)

மதுரைச் சொக்கேசர் தோள்கள் தடாதகைப் பிராட்டியாரைத் தழுவுவது. இது இதன் பொருள்

''...திருமதி னமிலர சுறுமகு மூது
''முகமது நபிதம திருபொற் புயங்கள்''

(மதீனக் கலம்பகம்—புயம்—தோள்வலிமை கூறல்)

மதுரைச் சொக்கருக்கு மனேவியாகத் தடாதகைப் பிராட்டி யுண்டென்றுல் மதீனத்தண்ணலுக்கு மனேவியாக ஆயிஷாப் பிராட்டியார் உண்டு. ஆயிஷாப் பிராட்டியாரின் தோள் மருவும் புயங்கள் நபிநாதர் புயங்கள் எனப் பாடிட முடியும் ஜீவரத்னக் கவியால்! ஆனுல் அப்படிப் பாடிட இஸ்லாம் அவரை அனுமதித்திடவில்லே. இப்படிப் பாடுவதுதான் இஸ்லாமிய மரபு.

''கொம்மைக் குவட சையச் சுடர்விழிவேல் போராடக்
கம்மக் கலனுஞ் சிலம்புங் கலந்தார்ப்ப
மும்மைத் தமிழ்மதுரை முக்கணப்பன் சீர்பாடி
யம்மென் மருங்கொசிய வாடுக பொன்னூச
லழகெறிக்கும் பூண்முலேயீ ராடுகபொன் னூசல்
மதுரைக்கலம்பகம்—ஊசல்.

இதன் பொருளாவது :- மலேபோன்று பருத்த தனங்கள் அசைய, வேல் போன்ற கூரிய விழிகள் (ஆண்கள் மனத்தில்

புகுந்து) போர் விளைத்திட, அரிய வேலைப்பாடுடைய கால் சிலம்புகளும், ஏனைய ஆபரணங்களும் கலந்து ஒலி எழுப்பிட, அழகிய மெல்லிடை துவள தமிழ் மதுரை முக்கண்ணப்பன் (சொக்கேசர்) புகழ்பாடி, அழகிய ஒளி வீசும் தனங்கள் (இரண்டு) உடைய பெண்களே ஊஞ்சல் ஆடிடுங்கள் என்பதாகும்.

அன்பாயென் னீமானைக் காலாய் நாட்டி
 ஆனகுரு உபதேசச் சட்டஞ் சேர்த்(து)
இன்பான தீனிலமை பலகை கோத்திட்(டு)
 இச்சையெனுஞ் சங்கிலியை இசைவாய்ப் பூட்டி
வன்பாக மிருளோட்டி ஆடீ ரூசல்
 மதினமா நகர்க் கரசே ஆடீ ரூசல்
முன்பாயுண் டானவரே ஆடீ ரூசல்
 முகம்மதுற் றசூல்நபியே ஆடீ ரூசல்

—மதீனக் கலம்பகம்—ஊசல்

இதன் பொருள் :. இறை நம்பிக்கையைக் கால்களாக நாட்டி, குருசெய் நல்லுபதேசத்தை குறுக்குச் சட்டங்களாக அமைத்து, சன்மார்க்கத்தை ஊஞ்சற் பலகையாகப் பொருத்தி, விருப்பமெனும் சங்கிலி பூட்டி, பக்குவமற்ற தன்மையெனும் இருள் கடிந்தோடிட மதீனமா நகர்க்கு அரசரான முஹம்மதே (நபிகள் நாயகமே) ஊஞ்சல் ஆடுங்கள்.

மதுரைக் கலம்பகம் பாடியுள்ள மகான் குமரகுருபரர் முற்றும் துறந்த ஞானி. ‘‘பெண்ணென மாயப் பிசாசும் பிடித்திட்டென்னைக் கண்ணால் வெருட்டி முலையால் மருட்டி......’’ எனப் பெண்களை வெறுத்துப் பாடிடும் துறவிகள் தலைவர். இவர் பாடியுள்ள கலம்பகமே இவ்விதச் ‘சுவை’ தரும் என்றால், அதுவும் ஈசன் மேற் பாடியுள்ள கலம்பகமே இப்படி என்றால், இல்லறச் சுவைகண்ட இளம் கவிஞர்கள் மனிதர்களை—மன்னர்களைப் பாடிய கலம்பகங்கள் எவ்வாறிருக்கும் எனச் சுட்டிடவே யாவரையும்

போலவே நாமும் மதிக்கின்ற மகான் குமர குருபரரின் மதுரைக் கலம்பகத்தின் ஓரத்தைத் தொட்டேன். இஸ்லாமிய மரபு இவ்வாறு பாடிட அனுமதிப்பதில்லை என்பதைக் காண ஜீவரத்னக் கவிஞரின் கலம்பகம் அணி செய்கின்றது. இவ்வாறு இவ்வுறுப்புகளின்கீழ் வந்துள்ள பாடல்களே யன்றி, ஏனைய மதங்கு, காலம், சம்பிரதம், கார், தவம், குறம், பாண், களி, சித்து, இரங்கல், கைக்கிளை, தூது வண்டு, தழை, மறம் போன்ற இதர உறுப்பின்கண் வந்துள்ள பாடல்களையும் நுகர்வினர் நோக்குதல் பயன் தருவதாகும். இது பொருள் விளக்கம் பற்றியது.

யாப்பிலும் ஏனைய கலம்பக ஆசிரியர்களை விஞ்சிக் காட்சி தருகின்றார் ஜீவரத்னக்கவி. குறிப்பாக வடமொழி யாளர் யமகம் எனப் புகலும் மடக்கு (ஒரே சொல்லை வெவ்வேறு பொருள்வர மடக்கி மடக்கிப்) பாடுவது கடின மாகும். இத்துறையில் இவருக்கிணை எவருமிலர் எனக் கூறலாம். ஆம்! மடக்குப் பாடல்களையும் சந்தம் விரவ, ஓசை நயம் துலங்கிட செட்பலோசைச் சிதைவின்றிப் பாடுகின்ற வல்லமை இறையருளால் ஜீவரத்னக்கவி ஒருவர்க்குக் கை வந்த கலையாய் உளது.

''தாரினி விலகிய பட்சியே
சந்தத மேயெனைப் பட்சியே
காரின மிலகிய வேலையே
காணவு மேநினை வேலையே
நீரினி லுலவிய அன்னமே
நித்த மருந்தின மன்னமே
ஏரிசை பெறுமதி ஞவிலே
என்நபி பதமதி நாவிலே''

இது அறுசீர்க் கழி நெடிலடி யாசிரிய மடக்கு விருத்தம்

''அலைதரு சிந்தை அலைதரு சிந்தை
ஆரமெறிந்தா யாரமெறிந்தேன்
கலைமதி பெற்றாய் கலைமதி பெற்றேன்

கண்ணை யுறங்காய் கண்ணை யுறங்கேன்
சலமது கொண்டாய் சலமது கொண்டேன்
சஞ்சலமுற்றாய் சஞ்சல முற்றேன்

இது கலித்தாழிசையில் அமைந்த மடக்குப் பாடலில் உள்ள அடிகளில் மூன்று.

மதீனக் கலம்பகம் எனும் இந்நூலின் எட்டாம் பக்கத்தின் அடியில் ஓர் ஓசை நயம்மிக்கச் சந்தப்பா ஆரம்பமாகின்றது.

"தினகர னெதிர்வளர் மதியுடை யுறவரு
தினமகு சரிலெதிர்
தேடி யாரும் மனமது
சாம்பு வோரும்......"

இவ்வாறு தொடங்குகின்ற இச்சந்த விருத்தப் பாடலில் உள்ள சீர் அனைத்தையும் ஆசிரியச் சீராகக் காணின் பதினெண்சீர்ச் சந்த விருத்த மாகின்றது. அன்றி "தேடி யாரும்" என்பதனை ஒரே சீராகவும், அடுத்துள்ள 'மனமது' என்பதை ஒரு சீராகவும், சாம்புவோரும் என்பதை ஒரு சீராகவும் கூவிளங்காய்-கருவிளம்-கூவிளங்காய் எனும் வாய்பாட்டால் கண்டு கொளின் ஒன்பான் சீர் கொண்ட சந்த விருத்தமாகவும் அமைகின்றது. அளவு எதுவாயினும் பாடல் செப்பலோசை சிதைவற அமைந்த இனிய இசை நயம் மிக்க பாடலாக உளது. இப் பாடல் போன்றே ஏனைய எல்லாப் பாடல்களுமே ஆற்றொழுக்காய் அமைவுற்ற அருந்தமிழ்ச் சந்த இசைப் பாடலாகவே காணக்கிடக்கின்றது. வெண்பாக்களும் அப்படியே.

இந்த மதீனக் கலம்பகம் எனும் நூலினை யாப்பறிவு பெற்றிட இளங்கவிஞர்கள் அவசியம் பயிலல் வேண்டும்.

இசைப்புலவர்கள் தங்களின் இசை நயத்தை எழிலுற விளக்கிக் காட்டிட இக்கலம்பகம் பயில்வது அவசியம்.

தமிழறிஞர்கள் ஜீவரத்னக்கவிஞரின் தமிழாற்றலைக் கண்டு நயந்து விதந்தோதப் பயன்படுகின்ற பண்பார் தமிழ்க் கலம்பகம் மதீனக்கலம்பகம்.

இஸ்லாமியர்கள் தவமியற்றினாலும் கிட்டிடாத இந்தச் செந்தமிழ்க் கலம்பகத்தை இதில் வரும் இஸ்லாமிய வரலாற்றுச் செய்திகட்காகவும், மாநபியின் புகழ் பாடிடவும், ஏனையோரிடம், 'இதோ! எங்கள் கலம்பகம்' எனப் பாடிக் காட்டிடவும் பயின்றிடல் இன்றியமையாததாகும்.

இந்நூலை நீண்ட இடைவெளிக்குப் பின்னர் மறுபதிப்பாக்கி அளித்திடும் அல்ஹாஜ் க. செ. செய்யது முஹம்மது அண்ணாவியார், ஆலி ஜனாப் புலவர் அஹ்மது பஷீர் எம். ஏ. பி. எட். ஆகியோரை அளவு கடந்து நேசிக்கிறேன். ஏனைய இஸ்லாமியக் கலம்பகங்களும் தூங்கெழில் மாடத்தினின்றும் துரிதமாக வெளி வந்திட வல்ல நாயன் அருளிடுவானாக.

சென்னை-2.
14—4—84

—கவி கா. மு. ஷெரீப்.

# முகவுரை

புலவர் அ. அஹ்மது பஷீர், எம். ஏ. பி. எட்.

வாணிகப் பெருமக்களும் மார்க்க வல்லுநர்களும் மலிந்து விளங்கும் ஊர், அதிராம்பட்டினம். அங்கு வாழ்ந்த, ஈடும் எடுப்பும் அற்ற, இணையற்ற பெரும்புலவர் அமிர்தகவி சையிது முஹம்மது அண்ணாவியார். அவர் மூத்த மகன் ஜீவரத்தின கவி சையிது மீரா லெப்பை அண்ணாவியார். அமிர்த கவியார் காலம் பதினெட்டாம் நூற்றாண்டின் தொடக்க காலம்.

முன்னோர் வரலாறு : சையிது முஹம்மது அண்ணாவியார் மதுரையிற் பிறந்தவர். அவர்தம் பாட்டனார் பெயர் நூறுத்தீன் லெப்பை. தந்தையார் பெயர் செய்கு மீரான்.

இளமையில் பெற்றோரை இழந்து வருந்திய சையிது முஹம்மது மனம் வருந்தி மதுரையை நீத்தார். மதுக்கூரை அடைந்தார். மார்க்க அறிஞரிடத்து இறைமறை குர்ஆனையும், மார்க்க நூல்களையும் கற்றார். மூத்தா குறிச்சி என்னும் சிற்றூரில் திண்ணைப்பள்ளியொன்று இருந்தது. அங்குச் சேர்ந்தார். செந்தமிழ் இலக்கிய இலக்கணங்களைக் கற்றார்; தேர்ச்சி பெற்றார்.

யமகம், திரிபு, அந்தாதி, மாலை மாற்று முதலான அரிய பாடல்களை விரைந்து பாடும் ஆற்றல் பெற்றார். இல்வாழ்க்கையிற் பற்றுக்கொள்ளாது துறவிபோல வாழ்ந்தார். நாகூர் சென்றார். அங்குச் சில காலம் அருந்தமிழ் பயிற்றும் பெருந்தொண்டு புரிந்தார். பிற்காலத்தில் ஜவ்வாது புலவர் என்று பாராட்டுப் பெற்ற மீர்ஜவாது போன்ற தலைசிறந்த மாணாக்கர் பலர் அவரிடம் அருந்தமிழ் கற்றனர்; அகக்கண் திறக்கப்பெற்றனர்.

சையிது முஹம்மது அண்ணாவியார் நாகூரில் இருந்த போது ஆன்மிகப் பெரியார் ஒருவரின் நட்புக் கிடைத்தது. ஷைகு வஹாபுதீன் என்பது அவ்வான்றோரின் பெயர். அண்ணாவியாரின் அறிவுக் கூர்மையைக் கண்ணுற்ற அவ் வான்றோர் அவருக்குத் தீட்சையளித்தார். தம் ஆன்மிக மாணாக்கராய் அரவணைத்தார். தம் சொந்த ஊராகிய வழுத்தூருக்கு அழைத்துச் சென்றார். அருகில் இருக்கும் ஐயம்பேட்டையில் பள்ளியொன்று ஏற்படுத்தப்பட்டது. அப்பள்ளி வாயிலாக அண்ணாவியார் மாணாக்கரின் அறிவுக் கண்களைத் திறந்துவிட்டார்.

அதிராம்பட்டினம் அக்காலே சிறந்த துறைமுகப்பட் டினமாயும், வாணிகப் பெருநகராயும் வளர்ந்திருந்தது. காயல், தொண்டி, கீழக்கரை, பரங்கிப்பேட்டை முதலான ஊர்களோடு நெருங்கிய தொடர்பு இருந்தது. பன்னாட்டு வானிகர் பலரும் அங்கே குடியேறி வாழ்ந்து வந்தனர்.

''அபாத்து'' என்னும் அழகிய பெயரால் அரபு வாணி கர்கள் அதிராம் பட்டினத்தை அழைத்து வந்தனர். கொள்வினை கொடுப்பினையும் வைத்திருந்தனர்.

''கல்வி மாண்டவர் கருன்று வைகிடமாம் செல்லி மாநகர்'' (பிக்ஹு மாலை) என்றும், ''மதுரைச் சரகமதின் மாநகரம் செல்லி'' (நேர்வழிப் பிரகாரம்) என்றும் அதிராம் பட்டினம் புலவர்களால் போற்றப்பட்டு வந்தது.

[கல்வியிற் சிறந்தவர் நெருங்கி வாழ்வதற்கு இடமாகிய செல்லி மாநகரம்; மதுரையின் ஆளுகைக்கு உட்பட்ட செல்லிமாநகரம் என்பது இவற்றின் பொருள்.]

அதிராம்பட்டினத்தில் திண்ணைப்பள்ளியொன்று இருந்தது. அதன் ஆசிரியர் கதிர்வேலு உபாத்தியாயர், மந்திர தந்திரங்களில் வல்லவர். தம்மிடம் இருந்த மாந்திரீகக் கலையைக் காட்டி மக்களை அச்சுறுத்தித் தமக்குப் பணிவுடையராய்ப் பிறர் வாழவேண்டும் என்னும் மனப் போக்குள்ளவர். அவரால் மக்கள் அடைந்த இன்னல்கள்

யல. மக்கள் மன அமைதியோடு நடமாட அஞ்சினர். "அவர் கொட்டத்தை அடக்க யாரேனும் ஒரு மாந்திரீகர் அகப்பட மாட்டாரா?'' என்றே யாவரும் எண்ணித் தவித் தனர்.

ஐயம்பேட்டையிலிருந்து அறிவுச்சுடர், பரப்பிய அண்ணுவியார் பற்றி மக்கள் அறியத் தொடங்கினர். மாந் திரீகக் கலையில் வல்லவர் அவர் என்பதையும், அக்கலையை மக்களின் நன்மைக்காகவே பயன்படுத்தக்கூடியவர் என்ப தையும் அறிந்த அதிரை நகர மக்கள் மனம் மட்டற்ற மகிழ்ச்சியடைந்தது.

சையிது முஹம்மது அண்ணுவியாரைச் செல்வி நகருக்கு அழைத்துவர வேண்டும் என்று விழைந்தவர்களுள் லப்பைத் தம்பி மரைக்காயர் என்னும் பெருவள்ளலும் ஒருவர். அவரது வேண்டுகோள் ஓலையைத் தாங்கி மக்கள் ஐயம்பேட்டையை அடைந்தனர். அண்ணுவியாரை அணுகினர். தம் அல்லலைக் கூறி அதிரைக்கு வருகை தரு மாறு வினயமுடன் வேண்டிநின்றனர்.

ஐயம்பேட்டை மக்களின் அன்பு ஒருபுறம்; அதிரை மக்களின் அவலக்குரல் மறுபுறம். செய்வது அறியாது திகைத்தார் சையிது முஹம்மது அண்ணுவியார். இறுதி யில், மக்களின் இடுக்கண் தீர்க்கும் எண்ணமே மேலோங் கிற்று. அரசர்க்குரிய பெரு மரியாதையோடு அண்ணுவி யார் அதிராம்பட்டினத்திற்கு வருகை தந்தார்.

"நம்முன் அச்சம் இன்றி நடமாடும் மக்களின் இந்தப் புதிய போக்குக்குக் காரணம் என்ன? அண்ணுவியாரின் வருகை!'' கதிர்வேலு உபாத்தியாயருக்கு அது நன்கு விளங்கிவிட்டது. அண்ணுவியாரின் மாந்திரீகக் கலையைப் பற்றி அவர் முன்னரே அறிந்தும் இருந்தார்.

பொறாமை ஒருபக்கம், இயலாமை மறுபக்கம் அவர் இதயத்தை வாட்டின. இருப்பினும், அவர் எதையும்

வெளியே காட்டிக்கொள்ளவில்லை. நட்போடு பழகுவதைப் போல நடித்து வந்தார்.

ஒருநாள் கதிர்வேலு உபாத்தியாயர், சையிது முஹம்மது அண்ணாவியாரைக் காண வந்தார். ''முருகனுக்குக் காவடி எடுக்கப் பழனிக்குச் செல்கிறேன். விடைபெற்றுப் போக வந்தேன்'' என்றார்.

''முருகனைக் காணப் பழனிக்கு ஏன் செல்ல வேண்டும்? சுப்பிரமணியர் செல்வி நகருக்கே வந்துவிட்டால் உங்கள் வேண்டுதலை எளிதில் முடித்துவிடலாம் அல்லவா?'' என்றார் அண்ணாவியார்.

''அது எப்படி இயலும்?'' என்றார் உபாத்தியாயர். ''ஏன்! என்றால் இயலும்'' என்றார் அண்ணாவியார்.

நாளும் இடமும் குறிக்கப்பட்டன. செழியன் குளத்தருகே பூம்பந்தலொன்று போடப்பட்டது. மக்கள் வெள்ளம் கரைகட்டி நின்றது. அண்ணாவியாரும் உபாத்தியாயரும் எதிரும் புதிருமாய் அமர்ந்தனர்.

சையிது முஹம்மது அண்ணாவியார், முன்னரே தாம் பாடி வைத்திருந்த ஏட்டை எடுத்தார்; கதிர்வேலு உபாத்தியாயர் கையில் கொடுத்தார். "ஏட்டிலிருக்கும் மந்திரக் கவிகளை உரக்கப் படியும்'' என்றார். ''உமது தேவதம் காட்சி நல்கும்'' என்றார்.

''உபாத்தியாயர் படித்தார். பதினொன்கு கவிகள் வரை உரக்கப் படித்தார். உச்சாடன ஒலியெழுப்பிப் படித்தார். என்ன விந்தை! கதிர்வேலு உபாத்தியாயர் தம் தேவதம் கந்தவேளைக் கண்ணாரக் கண்டு கொண்டார். அருங்கலை விநோதர் அண்ணாவியாரின் ஆற்றலை அறிந்துகொண்டார். அன்று முதல் அவர்தம் அறிவுத் திறனுக்கு ஆட்பட்டார். அடியார்க்கு அடியார் ஆனார்.''*

---

*அட்டாவதானம் இராமசாமிப் பிள்ளை மகாபாரத அம்மானையின் பதிப்புரை.

சையிது முஹம்மது அண்ணுவியார் அவர்கள் பத்துப் புராணங்கள் வரை இயற்றியுள்ளார். அவற்றுள்,

நூர் நாமா
அலி நாமா
சந்தாதி அசுவமகம்

முதலியவை குறிப்பிடத்தக்கவை.

சையிது முஹம்மது அண்ணுவியாரின் மூத்த மகன் சையிது மீரா லெப்பை; இளைய மகன் நூர் முஹம்மது. தந்தையின் சொற்படி நடக்கும் தனயராய் இளைய மகன் இருக்க, மூத்த மகன் விளையாட்டுப் பிள்ளையாகவே வளர்ந்து வந்தார்.

நாடு போற்றும் நற்றமிழ்ப் புலவரின் மூத்த மகன் ஏடு கற்காமல், ஏதுக்கும் உதவாத விளையாட்டுப் பிள்ளையா யிருந்தால், இழுக்கு தந்தைக்கு அன்றோ?

அந்திம காலத்தை அண்மிக்கொண்டிருந்த அண்ணுவி யாரின் உள்ளத்தை அரித்துக்கொண்டிருந்த கவலையே அதுதான்.

அமிர்தகவி இவ் அவனியை விட்டுச் செல்லும் தருணமும் வந்துற்றது. இளையமகன் ஊரில் இல்லை. இருக்கும் மகனோ எதற்கும் உதவாத விளையாட்டுப் பிள்ளை. அழைத்தார் தந்தை. வந்தார் மகன். அருமைத் தந்தையின் திருவாய் மந்திரச் சொற்களை முணுமுணுக்கத் தொடங்கிற்று. அமிர்த கவி தம் உமிழ்நீரை அருமை மகனின் வாயிற் பொழிந்தார். ஆசி வழங்கினார். ஆவி பிரிந்தது.

அன்று முதல் சையது மீரா லெப்பையின் வாழ்வில் பெரிய மாற்றம் நிகழ்ந்தது. அன்று வரையில் அறிவைப் பெறுவதில் அக்கறையற்றிருந்த அவர் அறிஞர் பலரை அடுத்தார். அருந்தமிழையும் மார்க்க அறிவையும் ஒருங்கே பெற்றார். தந்தையைப்போல் தலைசிறந்த புலவராய்த்

திகழ்ந்தார். அமிர்த கவிராஜரின் மகன் ஜீவரத்தின கவி ராஜர் என்று மக்கள் சிறப்போடு போற்றினர்.

குலவிச்சை கல்லாமற் பாகம் படுமன்றோ! ஜீவரத்தின கவிராஜர் தம் தந்தையைப் போலவே மாந்திரீகக் கலை யிலும் சிறந்து விளங்கினார். மணியலங்கார சாத்திரத்திலும் வல்லவரானார்.

மணியலங்காரம்
மகுடி நாடகம்
மதீனக் கலம்பகம்

என்பவை ஜீவரத்தின கவிராஜர் சையிது மீரா லப்பை அண்ணாவியார் அவர்களின் சீரிய நூல்களில் சிறந்தவை ஆகும்.

மற்றொரு குலமணி : சையிது முஹம்மது அண்ணாவி யாரின் மகள் வயிற்றுப்பேரன் நயினா முஹம்மது பாவாப் புலவர். சொர்ணகவி என்னும் பட்டம் பெற்றவர். அருட் கவியாய் இலங்கிய சொர்ணகவியின் தனித்திறன் அண்ணா வியார் குலமணி என்னும் அழகிய பெயருக்கு உரித்தாக விளங்கியது.

அப்போது ஹிஜ்ரி 1275. வானகம் பொய்த்தது மண்ணகம் தவித்தது. ஆண்டுகள் மூன்றைத் தாண் டிய போதும் அதிவீரராமன் பட்டினத்தைச் சுற்றிலும் மழை பெய்யவில்லை. அப்போது அவ்வூரில் தங்கியிருந்த தொண்டிமாநகர் செய்கு சுலைமான் லெப்பை ஸாஹிப் அவர்கள் வேண்டுகைக்கு இணங்கி சொர்ணகவி மழைப் பாட்டைப் பாடினார்.

முதலில் சீறாப்புராணத்திலிருந்து மழையழைப்புப் படலம் பாடியபின் மழைப்பாட்டு பாடப் பெற்றது.

“செட்டுச் செய்பவர் துட்டத் தனங்களால்
சிறிது தானியம் உள்ளதை வாங்கியே
கட்டி வைத்து விலையைக் குறைத்திட
கட்டு வோர்உளக் கட்டகன் றோடவே

மட்டு வார்புய எங்கள் முஹம்மது
வள்ளற் காகஇப் போதினில் மாமழை
கொட்டு கொட்டென்று கொட்டஅருள் செய்வாய்
கோதி லாவடி வேஎங்கள் நாயனே!''

என்று பாடிய போது மழை கொட்டு கொட்டென்று கொட்டியது.

நெய்னு முஹம்மது பாவாப் புலவர்,

செய்கு தாவூது பிள்ளைத்தமிழ்

கியாமத்து மாலை

திருமண வாழ்த்து

வழிநடைச் சிந்து

மழைப்பாட்டு

முதலிய நூல்களை எழுதியுள்ளார்.

பிக்ஹு மாலை : நூர் முஹம்மது அண்ணாவியாரின் மகள் காதிர் முஹம்மது அண்ணாவியார், நவரத்தினக் கவி என்னும் நற்பெயர் பூண்டவர். பெரிய ஆலிம் ஸாஹிபு என்று பேர் பெற்று விளங்கிய முஹம்மது அப்துல் காதிர் ஆலிம் ஸாஹிப் அவர்களின் உரை பெற்று பிக்ஹு மாலை பாடியுள்ளார். பிக்ஹு மாலை பாடல் வடிவில் அமைந்த ஷாபி வழிமுறை (மதுஹபு) சட்டத் தொகுப்பு ஆகும். அந்நூலுக்குக் கொடை நாயகராய் விளங்கிய வள்ளல் காதிர் முஹிய்யித்தீன் மரைக்காயர் அவர்கள். உரை இயற்றியவர் நாகூர் வா. குலாம் காதிர் நாவலர் அவர்கள். பிக்ஹு மாலையோடு தொடர்புடைய இவர்கள் அனைவர் பெயரும் ''காதிர்'' என்றே இருக்கும் ''குதரத்தை'' (ஆச்சரியம்) என்னென்போம்!

காதிர் முஹிய்யித்தீன் அண்ணாவியார் மகன் ஹபீபு முஹம்மது அண்ணாவியார். தம் முன்னோரின் நூல்களை எல்லாம் அச்சிற் பதிப்பித்தார்.

அண்ணாவியார் பரம்பரையின் குலமணிகளாகிய சையிது முஹம்மது அண்ணாவியார் (இந்நூலின் பதிப்பாசிரியர்) இன்று அதிராம்பட்டினத்தில் மனைநூல் வல்லாராய் வாழ்கின்றார். அவரது இளவல் நூர்முஹம்மது அண்ணாவியார் தாமும் ஒரு புலவராய் இலங்கி மறைந்தார். அண்ணாவியார் குலவழித் தோன்றிய அருமணிகளுள் ஒருவராய்த் திகழ்ந்த முஹம்மது ஆரிப் என்னும் இளங்குயில் இலக்கியச் சோலையில் இனிய கவிதைகளை இசைத்து அண்மையில் தன் குரலை நிறுத்திக்கொண்டது. (இன்னாலில்லாஹி வ இன்னா இலைஹி ராஜி ஊன்)

பாட்டிலக்கியம் படைக்கும் நெடிய பரம்பரை தமிழக வரலாற்றில் அமிர்தகவி சையிது முஹம்மது அண்ணாவியார் பரம்பரை எனில் மிகையன்று.

மதீனக் கலம்பகம்

மாநிலந் தனக்கொரு மணிவிளக்கு எனலாய்த் தோன்றிய, மருவிலாது எழுந்த முழுமதி முஹம்மதுநபி(ஸல்) அவர்கள் பிறந்தது மக்கா நகர். இறை நெறி பரப்பக் குடியேறி வாழ்ந்தது மதீனமாநகர். மதீனா நாயகரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டது மதீனக் கலம்பகம்.

கலம்பக இலக்கணம்

பல்வேறு பொருளில், பல்வேறு செய்யுள்களில், பல்வேறு பட்ட பாத்திரப் படைப்புகள் மூலம் பாட்டுடைத் தலைவரின் ஆற்றலைப் பாடுவது கலம்பகம்.

---

முஸ்லிம் தமிழ்ப் புலவர் பாடிய பிற கலம்பகங்கள்:— 1. மக்காக் கலம்பகம், 2. நாகைக் கலம்பகம், 3. பகுதாதுக் கலம்பகம், 4. மதீனாக் கலம்பகம், 5. குவாலீர்க் கலம்பகம், 6. பதாயிகுக் கலம்பகம், 7. திரு மதீனக் கலம்பகம்.

பாட்டுடைத் தலைவரின் ஆற்றலைப் புலவர் தாமே நேரில் பாடாமல் ஊர்மக்கள் புகழ்ந்து பாடுவது போலச் செய்யுள்களை அமைத்தலும் சிறந்த உத்தியே.

கலப்பு + அகம்—கலப்பகம் என்றாகிப் பின்னர்க் கலம்பகம் என மருவிற்று. கலம்பகம் பதினெட்டு உறுப்புகளைக் கொண்டிருக்கும் ஆதலின் கலம் = 12, + பகம் 6 = 18 கலம்பகம் என்றாயிற்று என்பாரும் உளர்.

செய்யுள் அமைப்பு : இடைக்காலத்தே செய்யுள் இயற்றுவோர் அவற்றில் யமகம், திரிபு முதலான சொல்லணிகளை அமைப்பதில் தனித்திறமையைக் காட்டினர். அவை அரிதில் பொருள் விளங்கக்கூடியவை. அப்படிப்பட்ட சொல் உத்திகளைக் காட்டுவதில் புலவர்கள் போட்டியிட்டனர். அத்தகைய சொல்லணிகள் பலவற்றை மதீனக் கலம்பகத்தில் பரக்கக் காணலாம்.

நூல் வகை : "விருந்தே தானும் புதுவது கிளந்த யாப்பின் மேற்றே" என்பது தொல்காப்பிய நூற்பா. "விருந்து என்பது பழங்கதை மேல் பாடப்படுவதல்லாமல் புதிதாகத் தாம் வேண்டியவற்றால் செய்யுள் பலவும் தொடர்ந்து வரத் தொடுக்கப்படும் தொடர்நிலையாகும்" என்பது இதன் விளக்கம். எனவே, மதீனக் கலம்பகம் விருந்து என்னும் இலக்கிய வரிசையைச் சார்ந்தது.

பல்வகைச் செய்யுளும் அகம், புறம் என்னும் கூறுகளும் நகை, பெருமிதம், வெகுளி, உவகை ஆகிய சுவைகளும் நிரம்பிய ஒரு கலவை இலக்கியம், கலம்பகம். இது தேவர்க்கு 100, முனிவர்க்கு 95, அரசர்க்கு 90, அமைச்சர்க்கு 70, வணிகர்க்கு 50, வேளாளர்க்கு 30 எனப் பாடல்கள் வரையறையிட்டுப் பாடப்பெறும். இவ்வரையறை தவிர்ந்து பாடுதலும் உண்டு. மதீனக் கலம்பகம் 101 செய்யுள்களையுடையது. காப்புச் செய்யுள் நான்கையும் சேர்க்க மொத்தப் பாடல்கள் 105 ஆகும்.

கலம்பக உறுப்புகள் :

மதீனக் கலம்பகத்தில் புயம், களி, ஊசல், அம்மானை, கழிக்கரைப் புலம்பல், தவம், தலைவிக்கு உரைத்தல், புயல், தூது, தலைவி இரங்கல், சித்து, மறம், கேசாதிபாதம், சம்பிரதம், குறம், மதங்கு, தழை, பாண், காற்றூது ஆகிய பதினெட்டு உறுப்புகள் உள்ளன.

புயம் :- பாட்டுடைத் தலைவரின் தோள் வலிமையைக் கூறுதல்.

களி :- மகிழ்ச்சி. மகிழ்ந்தவர் தம் பாட்டுடைத் தலைவரைப் புகழ்ந்து கூறுதல்.

"பூவின்மேல் அடியர் வானரே பரவும்
பூமின்மேல் அடிப டாதவர்
போதவேத மகுமூது நாதர் சரணங்களே
புகழ் களியரேம்"

என்று களியர் (மகிழ்நர்) தம்மை அறிமுகம் செய்துகொள்கின்றனர்.

"பூமியின் மேல் வாழும் அடியவரும் வானவரும் புகழும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் பூமியிற் பாதம் படியாதவர்கள். அறிவொளி பரப்பும் வேதத்தைப் போதித்த அவர்களை நாங்கள் சரணடைந்து மகிழ்கிறோம்" என்பது பொருள்.

அம்மானை : பெண்கள் கூடியிருந்து விளையாடும் விளையாட்டுப் பாடல் இது. மூன்று பெண்கள் கூடிப் பாட்டுடைத் தலைவரின் தன்மைகளை நயம்படப் பேசிக்கொண்டே அம்மானைக் காய்களை உருட்டுவர்.

முதற்பெண்ணின் விளக்கத்திற்கும் இரண்டாம் பெண்ணின் வினவிற்கும் முத்தாய்ப்பாக மூன்றும் பெண்ணின் விடை அமையும்.

ஊசல் : மகளிர் ஊஞ்சலாடிக்கொண்டே பாட்டுடைத் தலைவரின் பெருமைகளை எடுத்துக் கூறுவது. அல்லது பாட்டுடைத் தலைவரை ஊஞ்சலில் இட்டு ஆட்டுவதாகப் பாடுவது.

ஊஞ்சலுக்கு இருபக்கமும் கால்கள் இருக்கும். அல்லது உறுதியான கிளையில் ஊஞ்சல் கட்டப்பட்டிருக்கும். அக்கால்களுக்கிடையில் சட்டம்(உத்தரம்) போடப்பட்டிருக்கும். நாற்புறமும் சங்கிலிகளால் கோக்கப்பட்ட பலகையே ஊஞ்சலாய் அமையும். ஊஞ்சல் முன்னும் பின்னும் அசைந்தாடும்.

'அன்பாய்என் ஈமானைக் காலாய் நாட்டி
ஆனகுரு உபதேச சட்டஞ் சேர்த்து
இன்பான தீனில்அமை பலகை கோத்திட்டு
இச்சையெனும் சங்கிலியை இசைவாய்ப் பூட்டி
வன்பாகம் இருள்ஓட்டி ஆடீர் ஊசல்!
மதினமா நகர்க்கரசே ஆடீர் ஊசல்,
முன்பாய்உண் டானவரே ஆடீர் ஊசல்,
முஹம்மதுர் ரசூல்நபியே ஆடீர் ஊசல்,

ஜீவரத்தின கவிராஜர் அமைக்கும் ஊஞ்சற்பாட்டு இது. ஈமானும், குருவுபதேசமும் இனிய நெறியும் அளித்து இச்சை அடக்கி இருளை ஓட்டித் தம் உள்ளத்தையே ஊஞ்சலாக்கிப் பெருமானாரை அவ்வூஞ்சலில் ஏறி நின்று ஆடுமாறு வேண்டுகிறார் கவிஞர்.

[ஈமான்-நம்பிக்கை; தீன்-மார்க்கம் இச்சை-ஆசை. தொடர்தொடராய்ப் பற்றுதலின் ஆசை சங்கிலி எனப்பட்டது ஆசையை வெறுமனே விட்டுவிடாமல் பூட்டி வைத்தால் அவ்வாசை மிகப்பயன் விளைக்கும், ஆதலின் இச்சையைப் பூட்டுதல் என்றார்.]

கழிக்கரைப் புலம்பல் : தலைவரைப் பிரிந்த தலைவி கடலை நோக்கிக் கூறுவதாகப் பாடுதல். இங்கே தலைவி எனப்படுவது, அண்ணல் நபி (ஸல்) அவர்களைச் சென்று

அடைய வேண்டும் என்று அவாவி நிற்கும் புலவரின் நெஞ்சமே!

அலைக்குள் ஒதுங்கும் பணிவளையே
அங்கத்து ஒதுங்கும் பணிவளையே
அடுஞ்சேற் கண்ணே மலங்கினவே
அடுஞ்சேற் கண்ணே மலங்கினமே

நலிக்க அசைக்கும் உள்ளானே
நான்நா வசைக்கும் உள்ளானே
நண்பே வளரும் மஞ்சுகமே
நவ்வே வளரும் அஞ்சுகமே

கொலைசெய் அதிக வலையினமே
கொண்டேன் அதிக வலையினமே
குடைபோல் தணியும் மேல்உடையே
கொசுவந் தணியும் மேல்உடையே

இலகும் படவே சுக்கானே
இச்சைப் படவே சுக்கானேன்
எந்தம் மதினத் தகமதுவே
எந்தம் மதினத் தகமதுவே!

அலைகளுக்கு நடுவே அழகிய சங்குகள் ஒதுங்குகின்றன. என் அங்கம் மெலிந்து அழகிய வளையல்கள் ஒதுங்கு (கழல்) கின்றன. கடலில் சேல்கண், மலங்கு முதலான மீன்கள் ஒன்றையொன்று பொருதுகொள்கின்றன. என் சேல் போன்ற விழிகள் தலைவரைத் தேடித் தேடிக் கலங்கு (மலங்கு) கின்றன.

வாடைக் காற்றால் உள்ளான் குருவிகள் உடல் நலி கின்றன. பிரிவுத் துயரைப் புலம்பியழுவதற்கும் இயலாத படி என் நாக்கு உள்ளுக்குள் அசைகின்றது. கொக்குகள் தம் துணையோடு வளர்கின்றன. தோணிகள் அருகில் அசை கின்றன.

மீன்களைக் கொன்று குவிக்கும் வலைகள் கரையில் காணப்படுகின்றன. என் உள்ளத்திலோ அதிகக் கவலைகள் குடிகொண்டுள்ளன.

உப்பங்கழியில் உடை மரங்கள் குடை போல் கவிந்து வளர்ந்துள்ளன. பிரிவுத் துயரால் இடை மெலிந்து என் உடைக் கொசுவம் தணிந்து வீழ்கின்றது.

கடற்கரையில் அழகிய படகுகள் சுக்கானோடு காட்சியளிக்கின்றன. நானோ ஆசைவாய்ப்பட்டுப் பலரின் ஏச்சுக்கு ஆளாய் நிற்கின்றேன். எனது அறிவும் மனமும் தேடுவது என்ன? எங்கள் மதின மாநகரத்தில் வாழும் அஹமதைத்தான். அகம் அதைத்தான் என்று தலைவிபுலம்பி அழுவதாகப் பாடும் புலவரின் கற்பனைத் திறனும் சொல்லாட்சியும் போற்றத்தக்கவை.

[பணி-அழகிய; வளை-சங்கு; வளையல். சேல்-மீன். மலங்கினம்-ஒருவகை மீன்இனம்; கலங்கினோம். உள்ளான்-ஒரு பறவை; உள்ளுக்குள். மஞ்சுகம்-கொக்கு நவ்வு-படகு. அதிக வலையினம்-அதிக வலைக் கூட்டம். அதி கவலையினம்-அதிக மனத்துயரானோம். உடை-உடைமரம்; மேலாடை. கொசுவம்-புடைவைக்கொசுவம். படவு-படகு. சுக்கான்-திருப்பும் கருவி. ஏசுக்கு ஆனேன்-பிறர் ஏசல் மொழிக்கு ஆளானேன்]

தவம் : தத்தம் நிலைக்குரிய ஒழுக்கம்.

''யாவரும் போற்றும் அருமறை விளைத்த
மாதவர் மதின மன்னவர் இரசூல்
..................................
சகல உயிர்க்கும் தாய்............

எனப் போற்றும் புலவர் பெருமான்

''நாடொறு மேதுயர் நோய்கலி யால்நான்
வாடி அலைந்தினம் மனம்அலை வேனோ
நாடதில் வளமதி னாவின் வள்ளலே
தாள்துணை யருள்செயும் தவங்கள் நேரவே''

நாள்தோறும் துயரால் வருந்தி அலேகின்றேன். மதினு நகர் எம்பெருமானே! தவம் உடையவனுய் யான் விளங்கத் தங்கள் தாளேத் துணேயாகத் தர வேண்டும் என்று வேண்டிக்கொள்கின்றூர்.

தலேவிக்குரைத்தல்: வழியிடைக் களேத்து வரும் தலே விக்குத் தலேவன் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் வாழும் மதினு நகர் சென்றுல் கவலேயின்றி வாழலாம் என்று தேற்றிக் கூறுதல்.

புயற்றூது : மேகத்தைத் தூதாக அனுப்புதல்.

நாற்றூது :- தலேவரிடத்தில் தூது செல்லும்படி அன்னம், வண்டு, மேகம், தன்னெஞ்சு ஆகியவற்றைத் தூதாக அனுப்புதல். தலேவரைப் பிரிந்து வருந்தும் வருத்தத்தால் உண்ணவும் மனமின்றி அன்னத்தை (சோறு)விட்டுவிட்டேன். அண்ணலார்பால் அன்னத்தை (பறவை) தூது விட்டேன். அதுவோ, அழகிய தாமரை மலர் போன்ற அடிகளே சரண் என்று அமைந்துவிட்டது. அந்த நாளே (தினம்) விட்டு அடுத்த நாள் வண்டினங்களேத் தூது சொல்லிவர அனுப்பினேன். அவை அண்ணலாரின் அழகிய அடிமலர்களின் அழகில் மயங்கி இருந்துவிட்டன. ஒவ்வொரு பொழுதையும் (கணம்) இழந்து வருந்திய நான் பின்னர் மேகங்களேத் (மைக்கனம்) தூது சொல்லி வருமாறு அனுப்பினேன். ஆனுல், அந்த மேகக் கூட்டம் அண்ணல் நபி (ஸல்) அவர்களுக்குக் குடைபிடித்தவண்ணம் அங்கேயே தங்கிக்கொண்டது. எனக்கோ ஆத்திரம்! ஆயினும் அடக்கிக்கொண்டேன். நெஞ்சத்தைத் தூதாக அனுப்பினேன். அதுவும் திரும்பி வரவில்லே! என் செய்வேன்! இழந்த என் நெஞ்சத்தையும் மீட்க இயலாமல் தவிக்கின்றேன்.

"அனத்தை விட்டேன்யான் அனத்தை விட்டேன்
அம்போருக அலர்ச்சரண் அடுத்த
தினத்தை விட்டேன்வண் டினத்தைவிட் டேன்மாத்
திருவடி மலரிணை அடைந்த
கனத்தைவிட் டேன்மைக் கனத்தைவிட் டேன்போய்க்
கவிகையே பிடித்திருந் ததுவாம்
சினத்தைவிட் டோர்பால் மனத்தைவிட் டேன்மதி
னத்தர்முன் அடுத்தன திருவே"

என்கிருள் தலைவி.

**இரங்கல்:** தலைவரைப் பிரிந்து தனியே இருக்கும் தலைமகள் தன் பிரிவை எண்ணி நெஞ்சம் இரங்கிக் கூறுவது.

**சித்து:** இரசவாதம் செய்பவர் தம் ஆற்றலை எடுத்துக் கூறுவதாகச் செய்யுள் இயற்றுவது. இரசவாதம் என்பது இரும்பு, செம்பு முதலியவற்றைப் பச்சிலைகளால் புடமிட்டுப் பொன்னாகச் செய்தல்.

**மறம்:** ஓர் அரசன் மறவர்குல மகளைத் தனக்கு மணம் பேசி முடிக்கும்படி தூதுவனை அனுப்ப, மறவர்கள் அத் தூதுவனைப் பார்த்து மணவினை மறுத்தும், அரசனை இகழ்ந்து பேசியும் தூதனை அனுப்பிவிடுவதாகப் புலவர் பாடுவது.

**கேசாதி பாதம்:** முடிமுதல் அடியளவும் கூறுவது.
**சம்பிரதம்:** இந்திர ஜாலம்.
**குறம்:** குறத்தி பாடும் பாட்டு.

**மதங்கு:** தன் இரு கைகளிலும் வாளாயுதத்தை ஏந்திச் சுழற்றிக்கொண்டே பாடும் பாட்டு.

**தழை:** பூந்தழையுடை (கதம்பம் போன்றது).

**பாண்:** பாணன்—பாட்டுப் பாடுபவன். பாணனை வெகுண்டு கூறுதல் பாண் எனப்படும்.

**பாடல் வகைகள் :—**

வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா, மருட்பா ஆகிய பா வகைகளும், தாழிசை, துறை, விருத்தம் ஆகிய பாவினங்களும் மதீனக் கலம்பகத்தில் விரவி வருகின்றன. சந்தக் குழிப்புகளும், தூங்கல், துள்ளல், செப்பல் ஆகிய ஓசைகளும் ஆங்காங்கே எடுத்தும், படுத்தும், நிரவியும் அடுத்து நடக்கின்றன.

''நீரே உதிர்தரவிண் ணீரேதோய்ந் தீரேகண்
ணீரே சொரிவேன் நினைப்பருளும்''

எனச் செப்பலோசைமிகப் புலவர் பாடும்போது நம்முடைய கண்களில்ருந்து நீர் உருள்வது போலிருக்கிறது.

மறுமையில் தீர்ப்புநாளில் மக்கள் தியங்கித் தவிக்கும் போது, யாநஃப்ஸீ! யாநஃப்ஸீ! (என்னுடைய ஆன்மாவே என்னுடைய ஆன்மாவே) என யாவரும் தம்மை நினைத்து உருகும்போது, யா உம்ம(த்)தீ! யா உம்ம(த்)தீ! (என்னுடைய கூட்டமே என்னுடைய கூட்டமே) எனத் தேடித் தவிக்கும் பெருமானாரின் பேரருளைக் கவிஞர் எத்துணை நயமாக உரைக்கின்றார்.

''தியங்கி யவரவர் புலம்பி அழுதழு(து)
இடைந்து மனுஷரின் மயங்கு பொழுதெதிர்
சீரோங்கி இலங்கு பரம்பரன்
நீர்தான் துணைஎன்று புகழ்ந்துயர்
திருவருள் கொடுபர கதிபெற மிகுதுயர்
திகழடி மைகளை யழைக்கச் சிறந்தன''

(புயம்-பக்கம் 26)

சொல்லணிகள் : அந்தாதி, யமகம், திரிபு, மடக்கு முதலான சொல்லணிகளையும் திரிபங்கி, பஞ்சபங்கிக் கலித்துறை, சோம சூரிய வெண்பா, யானை வீதிச் சதுரங்க வெண்பா முதலிய சித்திரக் கவிகளையும் ஜீவரத்தினக் கவிராஜர் திறம்பட யாத்துள்ளார். பின்னர்க் குறிப்பிடப்

படும் அணிகள் இரண்டும் தண்டியலங்காரத்தில் காண படாதவையாகும். யானைவீதி - யானை செல்லும் வழி*

மடக்கு : வந்த தொடர்களே திரும்பத் திரும்ப வரும். ஆனால், ஒவ்வொரு முறையும் சொற்களை வெவ்வேறு வகை யாகப் பிரித்துப் பொருள் கொள்ள வேண்டும்.

திரிபங்கி :- ஒரே பாட்டினுள் மூன்று பாட்டுகள் இடம் பெறுவது. திரி—மூன்று, பங்கி-பங்காக அமைந்தது.

"பொன்மதினர் சேவடிபூந் தாரையிணை தாராதென்
றன்னலமோ தாரகைநம் மாரூரும்—மன்னுபுகழ்
இன்னபிதன் மாலடிமைக் கேரேனோ உன்னமிலா
தென்னேர மோசீரே றும்"

இப்பாட்டினுள் பின்வரும் இரண்டு பாடல்கள் அமைந் துள்ளன.

(1) நேரமோ சீரேறும் பொன்மதினர் சேவடிபூந்
தாரையிணை தாராதென் றன்னலமோ—தாரகைநம்
மாரூரும் மன்னுபுகழ் இன்னபிதன் மாலடிமைக்
கேரேனோ உன்னமிலா தென்.

(2) சீரேறும் பொன்மதினர் சேவடிபூந் தாரையிணை
தாராதென் றன்னலமோ தாரகைநம்—ஆரூரும்
மன்னுபுகழ் இன்னபிதன் மாலடிமைக் கேரேனோ
உன்னமிலா தென்னேர மோ.

பஞ்ச பங்கி :— ஒரு செய்யுளுக்குள் தனித்தனியான ஐந்து செய்யுள்கள் இடம் பெறுவது. பஞ்சம்-ஐந்து, பங்கி-பங்காக அமைந்தது.

---

*சதுரங்க ஆட்டத்தில் யானை செல்லும் வழி யானை வீதி எனப்படும். கிழக்கு மேற்காகவோ தெற்கு வடக் காகவோ நேர் நேராகவே யானை செல்லும்; சதுரங்கத்தில் அறுபத்து நான்கு கட்டங்கள் இருப்பது போல இவ்வெண் பாவில் அறுபத்துநான்கு எழுத்துக்கள் உள்ளன.(பக்கம் 65)

மதீனக் கலம்பகத்தின் தனிச்சிறப்பு : கலம்பகம் பாடும் போது எந்த வகையிலும் தம் ஏகத்துவக் கொள்கைக்கும், இஸ்லாமிய நெறிமுறைகளுக்கும் வழுவில்லாதவாறு பாடல்களை யாத்துள்ளார் ஜீவரத்தின கவிராஜர். பிற கலம்பக ஆசிரியர்கள் கையாண்டுள்ள வலைச்சியார், இடைச்சியார், வெறிவிலக்கு, கொற்றியார் முதலிய துறைகளைக் கையாளாது தமக்கு ஏற்புடைய துறைகளை மட்டுமே எடுத்தாள்கின்றார். சில இடங்களில் தம் கொள்கைக்கேற்ப அத்துறைகளில் மாற்றம் செய்துள்ளார்.

'பாண்' துறையில் தலைவனின் பரத்தைமைப் பிரிவைப் பாடாமல் பாணன் தீனுக்காக (நெறி) அலைவதாகப் பாடுகிறார். களி என்னும் துறையில் மகிழ்ச்சி என்னும் பொருளை மட்டுமே தருகின்றார். மதங்கி என்பது வாளாயுதத்தைச் சுழற்றிப் பாடிவரும் பெண்ணைக் கண்டு காமுறுவது எனப் பிறவாசிரியர் கூற, ஜீவரத்தின கவிராஜர் 'மதங்கு' ஆடவர் பாடும் ஒருவகைப் பாட்டு என்ற பொருளில் கையாள்கிறார். தழை என்னும் துறையில் களவுப்புணர்ச்சியில் தலைவன் தலைவிக்கு அணிவிக்கும் பூவாடை என்ற பொருளில் பிறர் பாடியிருக்க, ஜீவரத்தின கவிராஜர், 'நபிகளின் ஊரில் தருவில் தழைக்கும் தண்டழை இவை' என்று பாடுகின்றார்.

இவ்வாறு எல்லா வகையிலும் ஜீவரத்தின கவிராஜர் சையது மீரா லெப்பை அவர்களின் பாடல்கள் தனித்திறன் பெற்றே இலங்குகின்றன.

பதிப்பாசிரியர் : இந்நூலின் பதிப்பாசிரியர் க செ சையது முஹம்மது அண்ணாவியார், அண்ணாவியார் குலதிலகர். மனையலங்கார சாத்திரத்தில் வல்லவர். அதிராமபட்டினத்தில் வாழும் முதுபெருஞ் சான்றோர். தம் அண்ணாவியார் குலவழித் தோன்றிய எல்லா நூல்களையும் புதுப்பித்துத் தமிழ் உலகுக்கு அளிக்க வேண்டும் என்பது அவர்களின் அளப்பரிய ஆசை. அவர்களின் முயற்சியால் ஜீவரத்தின

கவிராஜரின் மகுடி நாடகம், மதீனக் கலம்பகம் ஆகியவை இப்போது வெளிவந்துள்ளன. எஞ்சியுள்ள பிற நூல்களும் வெளிவர இறையருள் கூட்டுவானாக, ஆமீன்!

சென்னை-5,
3, ஜமாதில் அவ்வல் 1404
7—3—1984

அ. அஹ்மது பஷீர்

# சிறப்புப்பாயிரம்

இந்நூலாசிரியர் புத்திரராகிய நவரத்தினக்கவி காதிர் முகியித்தீன் அண்ணவியார் குமாரர் அதிவீரராமன் பட்டணம் சையியிது முகம்மது அண்ணவியார் இயற்றிய

ஆசிரிய விருத்தம்

சீரோங்கு மெய்ப்பொருட் பேரறிவி ன்ஆனந்த
சின்மயம தான பரனின்
சிற்சமய போதசற் குருரசூல் எம்பிரான்
சேவடி துதித்தி றைஞ்சி
ஏரோங்கும் எந்தையின் முன்றந்தை யாய்வந்(து)
இலக்கிய இலக்க ணந்தேர்
இனியமுத் தமிழ்ஞான ஜீவரத் தினகவி
இயற்றுபிர பந்தங்களுள்
பேரோங்கு மாமதீனக் கலம்ப கமெனப்
பெருமையின் உயர்ந்த நூலைப்
பெட்புடன் அருங்கலைகள் ஒப்புற வுணர்ந்துபுகழ்
பெற்றுவளர் வித்வ மணியாய்ப்
பாரோங்கு நாகூர் குலாம்காதிர் நாவலர்
பார்வையுற் றிகம்விளங்கப்
பன்மையொடு மின்னுறச் சென்னை நகரச்சிற்
பதித்திட விதித்த னரரோ.

# சாற்றுக்கவி

நாகூர் தர்கா-வித்வான் மாண்புமிகு
வா. குலாம் காதிறு நாவலர் இயற்றிய

விருத்தம்

கானமரும் நபிகள்பி ரான்அமர் மதீனக்
கலம்பகமாம் இந்நூலைக் களிப்பாற் செய்து
தீனமரு நெடுங்கடல்சூழ் உலகம் வாழ்வார்
சிரஞ்சுமந்து கொண்டாடுந் திறத்தில் தந்தார்
ஆனமரும் அதிவீர ராமன் நல்லூர்
அமிர்தகவி செய்யிதுமு கம்ம தீன்ற
தேனமருங் கவிமாரி பொழியு மேகஞ்
சீவரத்னக் கவிராஜ சிங்க மன்றே.

திரிசிரபுரம்-இலக்கண உபாத்தியாயர் மாண்புமிகு
ஆ. கா. பிச்சையிபுராகீம் புலவர் இயற்றிய

வெண்பா

சுதீனக் கலம்பகத்தைத் தொல்லுலகிற் செற்றூர்
மதீனக் கலம்பகத்தை வைத்தார்—பதீநக்கச்
சீவரத்தி னக்கவியாஞ் செந்தமிழின் வன்மைபெறுங்
காவரத்தி னக்கவிச்சிங் கம்.

யாழ்ப்பாணம் மாண்புமிகு சு. அசனலெப்பை இயற்றிய

கட்டளைக் கலித்துறை

கந்தங் கமழ்நபி கோமான் மதீனக் கலம்பகத்தை
அந்தமில் கேள்வி யவர்கள்கொண் டாட வமைத்தளித்தார்
நந்தங் குலத்தின் அதிவீர ராம னகர்நனிவாழ்
செந்தமிழ் வல்லவர் சீவரத் தினக்கவிச் சிங்கமன்றே.

நாகூர் மாண்புமிகு மு. செவத்த மரைக்காயர் பாடிய

அறுசீர்க் கழிநெடிலடி விருத்தம்

சிலம்பகவெவ் வரவுபணிந் திறைஞ்சுநபி யரசிருக்கை
திகழ் மதீனக்
கலம்பகமென் றொருபிணையல் இனையறுகவிமலராற்
கட்டித் தந்தார்.
மலம்பகமெய் யறிவுவள ரதிவீர ராமனகர்
வாழ்க்கை மேய
தலம்பகரும் ஜீவரத்தினக் கவிராஜ ரென்றுயர்த்துந்
தகுதியே யாரே.

நாகூர் மாண்புமிகு ம. முகம்மது நயினு மரைக்காயர் பாடிய

கொச்சகக் கலிப்பா

தினங்கொண்ட பெரும்புகழ் மதீனக் கலம்பகத்தை
இனங்கொண்ட புலவரெலாம் ஏத்தெடுப்பப் பாடினரால்
அனங்கொண்ட வாவிவன வதிவீர ராமநகர்க்
கனங்கொண்ட ஜீவரத்னக் கவிராஜ வள்ளலன்றே.

நாகூர் மாண்புமிகு செ. அமீது மஸ்தான் புலவர் பாடிய

கட்டளைக் கலித்துறை

நானக் கவின்மெய் நபிக ளினாயகர் நண்ணியம
தீனக் கலம்பகஞ் செய்தணி பூப்பத் திகழ்த்தினர்மெய்ஞ்
ஞானக் கருத்தர் அதிவீர ராமன் நகரினர்வான்
மானக் கவிபொழி ஜீவரத் னக்கவி வாணரன்றே.

அதிவீரராமன் பட்டினம் மாண்புமிகு நவரத்னக்கவி
அவர்கள் மாணுக்கராகிய, அதே ஊர் மாண்புமிகு
பு. பிச்சைராவுத்தர் இயற்றிய

அறுசீர் ஆசிரிய விருத்தம்

வனமதினச் சரவமலைத் தருமதியம் வணங்குநபிக்
கதிபர் மேயக்
கனமதினக் கலம்பகமென் ருெருமுடிபைக் கவிமணியாற்
செய்து தந்தார்
சொனமதினக் கணமுசுலீ மவர்கள்சிரஞ் சுமந்துமனக்
கமலம் பூப்பத்
தினமதினத் தவந்திகழுஉஞ் செல்விநகர் ஜீவரத்னக்
கவிவல் லோரே.

அதிவீரராமன் பட்டினம் மாண்புமிகு
லெ. முகியித்தீன் பகீர் அவர்கள் இயற்றிய

அறுசீர் ஆசிரிய விருத்தம்

நிலைபெறுமெய்ப் புகழ்மதினக் கலம்பகமொன்
ருர்தரவே நிகழ்த்தித் தந்தார்.
தலைபெறுவிற் பனர்கடுதி பரவவிரு விழியிலொத்துந்
தகைமை பூப்ப,
வலைபெறுவா ரிதியுலக மணிநிகர்க்குஞ் செல்விநகர்
தன்னில் வாழுங்
கலைபெறுநல் லறிவினர்பாற் கதித்துயருஞ் சீவரத்னக்
கவிசிங் கேறே

அதிவீரராமன் பட்டணம் மாண்புமிகு
அ. கவிச்சிங்காரம் கந்தசுவாமிப் புலவர் இயற்றியவை

## எழுசீர் ஆசிரிய விருத்தம்

ஆரணப் பொருள்சேர் நபியிர சூல்வா ழணிந்த
றெனுமொளிர் மதீனக்
காரணப் புகழைக் கலம்பக மாகக் கழறினன்
கலையினுள் தேர்ந்த
பூரண மதியன் அமிர்தமார் மொழியன் புரவலன் ஈன்றசெந்
தமிழில்
தீன்என எவருந் துதித்தடி பரவுஞ் சீவரத் னக்கவீச் சுரனே.

## நேரிசை வெண்பா

சீர்பெருகு மாமதினத் திவ்யக் கலம்பகத்தைப்
பேர்பெருகச் செய்த பெரும்புகழான்—பாருலகில்
ஆறுமுக மானமுரு கையனேமுன் னேரில்உறத்
தேறலுட னேயழைத்தோன் சேய்.

# மதீனக் கலம்பகம்

## காப்பு

### வெண்பா

மதினத்தி வந்த மதினத்த விண்டோர்
மதினக் கலம்பகத்தை வாழ்த்திப்—பதனத்தி
யெத்தனே யத்தனே யெண்ணமிசை யெண்ணுமுள்ள
கத்தனே கத்தனே காப்பு.

ஆதரவு தேடி அறுசில் துயின்றநபி
பாதம் பெறப்பனுவல் பாடவே — கோதற்
றவனத் தவனத் தவனத் தவனத்
தவனத் தவனத் தவன்.

### கலித்துறை

திருவாய்த் திருவொளிவாய் நிறைவாகத் திரிபுவன
குருவான வள்ளல் முஹம்மதைப் போற்ற
குதாவருள்சேர்
தருவார்கை யாரொரு நால்வர் ஹசன்ஹுசைன்
தாள்சதுபத்
திருவா யிரம்அசு ஹாபிபொற் ருளை இறைஞ்சுதுமே.

தீனைக் கைதாங்கி ஒலிமார் புயத்திற்
செழுமலர்த்தா
ளனத்தி வைத்த சுல்தான் முகிய்யித்தீன்
எழில்கழலை
ஞானத் துடன்புகழ்ந் தே அன்பி யாக்கள்நல்
லோர்பெரியோர்
மே(ல்)நற் சரணந் துதிப்பேன் அனுதினம்
மெய்மகிழ்ந்தே!

—*1*

# நூல்

## வெண்பா

கார்கொண்டு பூவில் கருணைசெய்வோன் முத்தானோர்
சீர்கொண்ட மாமதிசை செய்யிதா — நீர்கொண்ட
கையால் உடுக்காட்டி ஞரா யிரங்கமில்உண்
மையால் உடுக்காட்டு வார். (1)

## விருத்தம்

வார்அணிமி னார்சுவன நாடுளர்து யோனருளும்
மாதவர்த யாளநெறியோர்
பூரணம தானகுண நீதர்இர சூல்புனித
மாய்உறையும் நீள்பதி சொலின்
கார்அணியு மேசிகர மேடைகளும் மாமறுகு
காவனமும் ஓடுநதியின்
சேர்அணிநி லாஎனவு மேதரள மேசிதறு
சீர்நகர மாமதினமே ! (2)

## சந்த விருத்தம்

தினகரன் எதிர்சவள மதியுடை யுறவரு தினம்மகு
ஷரில்எதிர்
தேடி யாரும்—மனமது
சாம்பு வோரும்

திருவிழி மிசைவர வடிசிர மிசைசெறி தரவியர்வைகள்
தேங்கி யோட—நரர் பலர்
ஏங்கி வாட

அனல்எறி உடன்அழு(து) இரைபவர் அடுதுயர்
அகல்தர முதல்வன்முன்
ஆங்க தாக—வரமது
வாங்கி மேவி

அடியவர் தமைவிரை வுடன்உயர் பதிதனில்
அழகொடு விடும்இறை
ஆம்பிரதானி—எவரினும்
மாண்(பு) இறசூலே

புனல்முகில் குடையிட நிழல்தர எழுபுவி
புனைகுறு(சு) அதின்மிசை
போர்ந்த தாளீர்—முடியறு
சார்ந்த நீளீர்

புடவியில் அடிபட அரிதுமுன் உறுவது புறன்அறி
வதும்அறி
பூண்டு வீசு—மறதிகள்
தோன்றி டாத

சினபுழு வியும்எயில் வருகுவ திலமல சலம்அற
ஒருகுறி
சேர்ந்த தோளீர்—சுவன
மிலேந்த லானீர்

சிகரம(து) இடைபுயல் தவழ்மதி னமில்அர(சு)
எனநவம் இலகிய
தேர்ந்த பீரே—நபிகளில் (3)
வேந்தர் நீரே.

**வெண்பா**

நீரே உகிர்தரவிண் ணீரேதோய்ந் தீரேகண்
நீரே சொரிவேன் நிணைப்பருளும் — நீரே
உழைக்குமதி னாவிருப்பின் உத்தரஞ்சொன் னீர்சீர்
தழைக்கு(ம்)மதி னுவிருப்பீர் தான். (4)

### விருத்தம்

தானே தானுய் சமதாய் நிறையும்
தக்கோன் ஒளியார் மிக்கா மதினக்
கோ(ன்)ஈ மா(ன்)நீ தியினுர் நயினுர்
கொந்தா லத்தார் எந்தா லத்தார்
வானோர் தீனோர் தூதிமா நபியை
வாயால் மனதால் நிதமும் புகழ
ஞானோர் ஆனோர் ஏனோ வாரார்
நானே ராதா லோபூ மானே! (5)

## அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பா

### (இவை தரவு)

பூமான் புவிமான் புகழ்விசய மான்வீர
மாமானும் நாமானும் மற்றுமூன்(று) எண்மானும்
வெற்றி அடிபரவ வேந்தர்பலர் தாள்தொழுக
உற்ற அபுபக்கர் உமர்உதுமான் அலியுமே
முந்த வலம்இடம்பின் முன்பாய் அமர்ந்திருப்ப
வந்தேழா ருயிரத்தின் வண்மையசு ஹாபிகளும்
தூதர்நபி மார்சூழத் துய்யோன் இமையோர்கள்
பாதஞ் சுமக்கவையப் பார்த்திவர்சொல் வாக்(கு)
உரைப்பச்
சத்தரெட்டி லோகந் தனில்அவ்லி யாக்கள்விண்ணோர்
சித்தர் தபோதனரும் தீனேரும் வந்(து)இறைஞ்ச
மகிழார்ந்த விந்தைவிண்மீன் வளைவ(து)என
நடுவிளங்கி
அகிலாண்ட கோடிஉல(கு) அனைத்(து)ஒருசெங்
கோல்புரிய

விசும்(பு)இலங்கும் கதிர்மதிமீன் வியன்பறவை
வழிவிலங்க
பசும்பொன்எயில் ஏழ்அடுத்த பதிமதினப்
புரிசையின்உள்
சொன்னநவ மணிபதித்த துலங்(கு)இரத்(தி)ன
மேடையின்மேல்
மின்இலங்கு ஞானுந்த மெய்க்கண்வளர் வீர்கேளீர்.

**(இவை ஆறும் தாழிசை)**

'நான்நாயன்' என்(று)அவனே நாடமற்றோர்
தான்அறியாத்
தானுகி எங்கும் சமதாகி யேநிறைந்தே
ஆதிமுத லாய்ச்சகல அண்டபிண்டம் யாவும்
ஒன்ருய்ச்
சோதிஒளி வாய்ப்புறவாய்த் துலங்கிநித்தில
மாகிநின்றும்

கலபமர கதமயிலாய்க் கருணைகீன் மரத்(து)இருந்தும்
வலமைபெறு தூண்டா மணிவிளக்காய்க் கூவலுமாய்

பல்லா யிரங்கோடி பார்அண்டம் மற்(று)எவையும்
வல்லாண்மை யாக்கை வரும்திவஸ் யாகியதும்

ஆதம்நபி வெந்நுறைந்தும் ஐயர்வந்து தான்தொழுதும்
ஓதும்நபி மார்என்றும் உம(து)ஒளியாற் பெற்றதுவும்

வண்மைஅப் துல் லாஹ்நுதலில் வந்(து)ஆமினு
உதரத்(து)
உண்மையுடன் உறைந்தே உதித்தரசூல் ஆகிநின்றீர் !

**(இவை நான்கும் அராகம்)**

உருஅரு ஒளிவெளி இன(து)என உணர்தர
அரியவன் ஒருபொருள் அருள்நய நெறிபொறை

தருமநன் னிலைகுணம தயவுமெய் வர(ம்)அழ(கு)
ஒருமையும் மகிமையும் உயர்கலை மறைபுகழ்

தவம்அறி வுடன்விறல் தலைமையும் முதன்மையும்
நவமதி கொடைகனம் நலமுறை குலமதில்

இன(து)உள(து) இன(து)இலை எனஎவர்
சொலுவர்கள்
தன(து)உடன் இறைசக லமும்அரு ளினன்மிக.

(இவை நான்கும் தாழிசை)

மைவேலை தருகலமாய் வானர்மனு ஜின்முதல்ஈறு
உய்வில்நாள் எழுதினு(ம்)நேரும் புகழ்க்கு
வரம்பாமோ?

முச்சுடரோ(டு) எவ்வொளியும் மொய்த்(து)ஒன்றாய்க்
கூட்டுகினும்
மெச்சும் உமதுதிரு மெய்யொளிக்கோர் பாலாமோ?

உங்கள்திருக் காரணத்தை ஊழிதொறும் ஓதுகினும்
தங்குமுதற் காப்பதற்குச் சாற்றுதற்கே வல்லர்எவர்?

ஒன்றாய் நிறைந்தோன் உவந்ததும்மைப்
போல்படைப்பில்
அன்று(து) உவந்தாலும் ஆங்கிறைக்கும் போதாதால்.

(இவை இரண்டும் அம்போதரங்கம்)

வேதமாய் நாதமாய் விந்தோ(டு) அந்தமாய்
நீதியாய்ப் பேதியா நிறையி லாகிநீர்

தானஞா னம்குரு தந்தை சிந்தைதாய்
ஆன(து) எவ்வகையும் நீராய் இலங்கினீர்.

(இவை முச்சீர் ஓரடி அம்போதரங்கம்)

மடிதரு மதலை எழுப்பினீர்
மலர்விழி யழிவு பொருத்தினீர்
படிமிசை அடியை உயர்த்தினீர்
பகர்மறை உலகில் விளக்கினீர்.

(இது ஆசிரியச் சுரிதகம்)

அல்அழைப்பவும் கல்எழுப்பவும்
அரிபகர்ந்ததும் கிரிபுகுந்ததும்
மல்லில் வென்றதும் புல்லுவிண்டதும்
இன்னவை போலாய் எண்அறா அனந்தம்
உன்னதந வஞ்செய் உற்பன நிதியே
போற்றுதல் யாரைப் போற்றினும் நிறைவே
ஏற்ற(ம்)ஒன்(று) அறியேன் எவைஅவை யால்நீர்
புன்சொலால் போற்றினும் புன்மைஎன்(று) இகழாது
அஞ்சல் தஞ்சம் கொடுத்து ஆள்வது பாரம்
பவன்அதி பதிதாழ் பதகன்என்(று) இகழாது
அவகடம் அகற்றி அன்புவைத்(து) அருள்வீர்
பஞ்சபா வம்செய் பாவியா னாலும்
கஞ்சமா மலர்த்தாள் காண்தரக் கடனே
யாமகு பூபே யாமுகம் மதுவே
யாமகு மூதே யாரசூல் நபியே
வஞ்சமே அகல மலரடி நிதமும்
நெஞ்சமே துதிக்க நினை(வு) அருள் வீரே. (6)

**விருத்தம்**

அருளும் அன்பதும் பொருளும் இன்பதும்
அரிய ஞானமும் உரிய தானமும்
தரும சிந்தையும் கரும விந்தையும்
தவிசு சொர்க்கமும் பவுசு வர்க்கமும்

ஒருதன் அன்பினுர் சுருதி பண்பினுர்
உலக நாதனுர் திலத நீதனுர்
மருவின் மெய்யினுர் அருள்செய் கையினுர்
மதின வாசனுர் கதம்என் நேசமே (7)

**எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்**

நேசமதில் நிதமே ஆசைகொடு பதமே
நித்தம் உவந்தேன் சித்தம் இரங்கி
தாசன்இவன் என்றே மாசகனே ஆளத்
தாமத(ம்)அது ஆகில் பூமிசை யுள்ளோர்
மோசன்மிகு பாசன் பாவிஎன வேதான்
முன்புரை சொல்வது நம்பிய லேகுவனே ?
வாசமதி னுவாழ் ராசம குமூதே
மனு இமையர் குருவே கனதிமறை முதலே.
(8)

**கட்டளைக் கலித்துறை**

முதற்போலும் வாணிபஞ் செய்வோர்க்கு நீர்க்கடல்
மூங்குமுன் அற்
புதத்தோணி போலப் பயிருக்(கு) ஒருமழை
போல்உதவி
இதச்சார்(பு) இல்லார்க்(கு) இங்கித நிலேபோலும்
இரட்சிக்கவந்தீர்
மதிக்கா ரணமதி னாவிளக் கன்பாம் மனவிரிவே(9)

## புயம்

### (தோள் வலிமை கூறுதல்)

### சந்த விருத்தம்

விரிந்த கிரணம(து) இலங்க எழில்நவம்
இயங்க அதிபுகழ் விளங்க அருள்புரி
வேதாந்தம் விரைந்(து)எழு தின்புறு
நாதாந்த வைரம்பெறும் ரஞ்சித
எழுபரி ஒருதிகிரி யின்வெயி லவன்என
விறலுறு பசியபொன் வெற்பிற் குயர்ந்தன;

விளங்கு சசிபுவி இழிந்து வரஅதி
சயங்க ளொடும்உரை இயம்பி அதனைமுன்
மேலோங் குறையின் கலையின்புக
மார்பார்ந்(து) இரு பங்குபகுந்(து) எழு
விரிகுட குணதிசை செலஇரு பிள(வு)ஒரு
வியன்முழு மதிஎன நிற்கப் பயின்றன;

மிகுந்த பெரியவன் உவந்து வரவிடும்
விருந்தை ஒருவனும் அருந்தல் செயனென
வே(று)ஆங்(கு) ஒருதிண் கரம்வந் திட
வேதான் சுடுகின்ற முதங்கதில்
விரைவிடு(டு) அளிஒரு குறிபட வுதவுற
விரையன நுகர எடுத்துப் பகுந்தன;

விரைந்து துடிதவில் முழங்க எதிர்பொர
இயைந்து கடல்என அடர்ந்து வரவர
வீரும் படைகண்டு நிலந்தனி
லேசாம்படி கொன்றிட வென்றியின்
மிகுகரி பரிமனு வரசர்கள் மடிவுற
விசைகொடு பிடிமண லைத்தொட் டெறிந்தன;

திருந்த இறையிடம் நடந்த வழியிடை
செழுங்கல் மிசைஅதில் இறைஞ்சி மகிழ்வொடு
தேவாம் பலரும் புகழும்படி
யேதாங்கியும் அந்தர மும்புவி
திசைநடு வெளிதனில் உகம்அறு தியின்வரை
திறமுடன் நிலைபெற நிற்கப் பரிந்தன;

தியங்கிய அவர்அவர் புலம்பி அழு(து)அழு(து)
இடைந்து மகுசரின் மயங்கு பொழு(து)எதிர்
சீரோங்கி இலங்கு பரம்பரன்
நீதான் துணை என்று புகழ்ந்(து)உயர்
திருஅருள் கொடுபர கதிபெற மிகுதுயர்
திகழ்அடி மைகளை அழைக்கச் சிறந்தன;

செறிந்து புயல்மழை சொரிந்து விடஅரி( து
எனும்சொல் கரமதில் உறைந்த அளவிடை
சேண்வெங் கனற்கண் படவும்புவி
நீர்பாய்ந்(து) உலவும் படி அங்(கு) உள
சிதைஉறு மாமலர் கனிஉதிர் தரஅருள்
செயநதி பெருக நகக்கண் பிறந்தன;

செலங்கள் பொழிமுகில் அலர்ந்த தருநிதி
தியங்க எவைகளும் மயங்க வசையுள
தீதாம் கலிகொண்டு வரும்பிணி
யால் மாய்ந்து வரும்பலர் அங்(கு)அவர்
சிறைவறு மைகள்அகல் தரமிகு தனபதி
செயல்வர நிதிகள் கொடுத்துச் சிவந்தன;

வருந்தி மனநிலை பொருந்தி முதல்வனை
வணங்க ஒருமையின் இணங்கி அனுதினம்
ஆராய்ந்து தவங்கள் விரும்பவும்
நேர்கூர்ந்திட வும்பலர் அங்கணும்

வளமுறும் உலுவொடு தொழு(து)இனி மையின்வரம்
அதுபெற நிதமும் முயற்றுற்(று) இருந்தன;

மடிந்த கரம்அது திருந்த மறுபடி
வளர்ந்(து) இலகஅதில் அகண்ட மொடுதிகை
வான்ஓங்கி வளர்ந்த நெடுங்கிரி
நாலுங்கரை அம்பொன் நெடும்பதி
மதிர விதிரைபல உலகமும் மகிமையின்
வளர்ஒரு கவிகையில் வைத்துப் புரந்தன;

வயங்கொள் புலியென எதிர்ந்த அறு(சு)இடை
வருங்கண் விரல்அணி விரும்பி உதவியும்
வாகார்ந்(து)உள உம்பருடன் றவ
ரேகாண்டுற வுந்தெரி கின்றில
மறைமுதல் ஒருபொருள் அருள்பெற கருணையின்
வடிவழகு உறுகுறி யைப்பிற் சுமந்தன;

மறங்கொள் கெடுதிசொல லிடும்பன் அபுஜகில்
மலங்க முகிலினம் ஒதுங்க லினவிற
வாரேங்கிட அந்தரம் ஒன்றிட
வேபோம்படி தண்டம் எறிந்(து) இவன்
வரும்அள வையில்அவன் உயிரது பெறநலன்
வழுவற விரைவொடு பற்றித் தணிந்தன;

தருங்கை யலிமெயில் நிரம்பும் வடுவினை
தவிர்ந்(து) அகலஅருள் சுரங்கம் எதிர்கொடு
தானீண்டு வரும்பணி துஞ்சவை
வாளேந்தி வெல்கின்றதும் அன்பொடு
சகமதில் நவமணி பளபள எனவும் ஒளி
தருகநன் நிலமிசை தட்டிச் சொரிந்தன;

தளம்பு தசையிணை அணங்(கு)அது எனஅதி
விதங்கள் உதவியும் அகந்தை ஒழிஇடர்
    தான்வீம்புரை அண்டலர் தங்களை
    யேவீய்ந்திட வும்பிரபை மிஞ்சிய
தனுவசி வளையயில் பலபடை களும்அணி
தரவெயின் நிலவொளி ரத்தொட் டணிந்தன.

சவுந்த ரிகஅதி சுகந்த விகசித
வசந்த முளநவ ரசங்கள் ஒழுகிய
    தா(து) ஆர்ந்(து) அணிதங்கி அலங்கிர்த
    காதாந்த நிரம்ப வெழும்பிய
சதமிரு கமதபரி மளமணம் எழுதரும்
சததள இதழ்என ஒத்துச் சிறந்தன.

தவம்பொறை யும்நெறி வரங்கள் அதிகிர்பை
தருங்கல் வியும்மறை விளங்க விளைவுசெய்
தார்வேந்தர் துரந்தர சுந்தரர்
ஏகாந்தம நண்பர் சிறந்தெழில்
தருமதி னமில்அரசு(உ)று மஹ்மூது
முகம்மது நபிதமது திருப்பொற் புயங்களே (10)

**விருத்தத் தாழிசை**

புயங்கம் புலிப்பார்வ தம்மூதை யாவும்
    பூவோடு நீரங்கி கோதாவோ டாழி
வயங்கும் கயற்சூரன் உழைவெற்பி னோடு
    வானூரும் மதிகுந்த மறியொட்ட கைக்கால்
முயங்கும் விலங்கும் புழுப்பட்சி கட்டை
    முளைப்பாசி லைத்தாரும் மொழிசொல்ல
விண்டீர்
செயங்கொண்ட மதிஞவில் அங்கார ணத்தீர்
    திரிலோகம் ஓர்கோல் செலுத்தாதி நபியே.
(11)

### கட்டளைக் கலித்துறை

ஆதி நுபுவ்வத்(து) இரசூல் மதினத்(து) அரசர்
உண்டென்(று)
ஓதினும் எப்பவமும் தீரும்என் உள்ளம் மூழ்நரகந்
தீதினுள் ஏகினும் பூவாழ்கினும் சென்னம்
சேரினும்எப்
போதினும் யாதினும் யான்மறவேன் உங்கள்
பூவடிவே. (12)

### தாழிசை

பூமானை நெகிழ்ந்தீர்உயர் கோமானை உவந்தீர்
புவிமீதில் இருந்தீர்மிகு கலிமீதில் உறைந்தீர்
ஈமான்நிறை வானீர்பிணை தாய்மான்இடம் ஆனீர்
ஏழைக்(கு) இனி யாரேஇரு தாளைத்தரு வீரே
காமாதலை அற்றீர்கலி மாமோகம் அளித்தீர்
ஹாசீம்குல மணியாய்வளர் தாசீம்எனும் நபியே
மாமாமதி னத்தீர்தவம் நேமாமதி கத்தீர்
வானோர்பணி வித்தாகிய தீனோர்புகழ் முத்தே.(13)

### விருத்தம்

முத்தான தெல்லாம் மதிப்பார் அறிந்தோர்
மூதண்ட பகிரண்ட உலகங்கள் அமைய
வித்தாக இறையோன் உவந்தேதன் ஒளியின்
மெய்ப்பாக முத்தொன்(று) அமைத்தான முத்தை
எத்தால் மதிப்பார்கள் கற்றோர்கள் தாமே
இம்முத்தை மதினாவில் இலகும்பொன் மதிலைச்
சுற்றாகி யேவந்து தானே பணிந்தால்
சொர்க்கத்தை நிலையாய் விலைக்குவாங் குவையே.
(14)

### வெண்பா

வாங்கிவரு வாயோ மலரடியைக் காணுமல்
நீங்கியகல் வாயோ நினைவறியேன்— ஓங்(கு)அளியே
ஆ!மதிஅற் றேன்அடிகட்(கு) ஆதரவுற்
றேன்எழுசுற்(று)
ஆம்மதினத் தார்புதினத் தார். (15)

### மடக்கு

### கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

தாரினில் இலகிய பட்சியே
சந்தத மேஎனை பட்சியே
காரினம் இலகிய வேலையே
காணவு மேநினை வேலையே
நீரினில் உலவிய அன்னமே
நித்தம் அருந்தினம் அன்னமே
ஏர்இசை பெறுமதி ஞவிலே
என்நபி பதம்மதி நாவிலே. (16)

### களி

### கலித்தாழிசை

நாவிலே தினமும் வேதம்ஓ தும்மதி
ஞவிலே தினமும் வாழுவோர்
நாடு! போ! துயரம்ஓடுமே சுவன
நாடுபே ரரசர் ஆகினேர்
பூவின்மேல் அடியர் வானரே பரவும்
பூவின்மேல் அடிப டாதவர்
போதவே தமகு மூதுநா தர்சர
ணங்க ளேபுகழ் களியரேம்

தேவைமா ளிகைஇரா வுடன்பசு
செகங்கள்என் றுமஊண குதிரையும்
தேனும்மா னும்உண வாயிருந் தவர்கள்
திறமையார் பகர வல்லர்கை

மாவி லேறிநவ மாவுரைத் துமிகு
மாவிளங் குபதி செல்குவோர்
மாவினே டுதிரு மாவிளங்கு சரண்
வருடபூ சைவெகு மகிமையே! (17)

## கழிநெடில் ஆசிரிய விருத்தம்

மகிதலத்தில் எழில்மதின வாழ்வேகோ
வேஉமது வரிசைத் தீனே
இகபரம்இ ரண்டிற்கும் படர்கொம்பாய்
வளர்ந்தோங்கும் இனிய மாக்கம்

பகையெடுத்தோர்க்(கு) அகல்நகரம்
பட்சம்வைத்தோர்க்கு
அஞ்சுவனம் பழுதொன் றில்லா
அகமறைமெய்ப் பொருள்ஆதி விதித்தவழிப்
படியேவே தஆக மத்தே. (18)

## (வேறு)

ஆகமபூரண காரணரேஆ சிமேகாசிமே
ஆதர வான கிருபாகரரேபூ மானே சீமானே
ஏகம் எலாம்அமை வோன்அருள் தூதே
என்பிர்என் பிரே
இரவினி லேகவு சுடன்அறுசு ஏறிய
விண்பிர் அன்பிரே

தாகம தாய்நினை வோர்கள்மு(ன்) னேவரு தாதா
வேதவே
சததள வனசநன் மல்ர்என உயர்இருதா
தாளிர் தந்(து) ஆளிர்
நாகம காமலை யேவச னஞ்சொலும் நாவீர்
மதினா வீர்
நன்று அகல்தீ மையில்ஒன்(று)அகமிசைநா
டீர்பொன் நாமடீரே (19

## திரிபங்கி

## வெண்பா

பொன்மதினர் சேவடிபூந் தாரையிணை தாரா(து)
என்(று)
அன்னலமோ தாரகைநம் மாரூரும்— மன்னுபுகழ்
இன்நபிதன் மால்அடிமைக்(கு) ஏரேனே
உன்னமிலா(து)
என்நேர மோசீர்ஏ றும். (20)

### கலித்துறை

சீரே கவிகை மஞ்சீரே எளியன் சிந்தைப்படிக்(கு)
யாரே அருள்வது யார்உமை யன்றி
அம்போருகக்கண்
பாரே அடிநிழல் பாரே படாத பதிமதினத்
தீரே கலிஇடர் தீர்அன்பி யாக்களில் சீர்அரசே. (21)

### விருத்தம்

சீரார் காவே மாவாழ் மதினத் தீரே மஹ்பூபே
ஏரா தேபோ னால்நா னேஈ டேறே னேஏழைக்(கு)
ஆரே வே(று)ஏதோ நீரேதஞ் சமதே அருள்வீர்தான்
பாரோர் வானோர் யாவோர் களின்மே லாம்(பு
ஆகிய கோவே. (22)

## அம்மானை

### கலித்தாழிசை

வேதந் திகழ்மதின வேந்தர்இர சூல்நபிதாம்
ஆதியாய் நின்ற அரும்பொருள்காண் அம்மானை
ஆதியாய் நின்ற அரும்பொருளே யாமாகில்
பேதகமாய்ப் பூவில் பிறந்ததேன் அம்மானை
பிறந்(து)இறப்ப(து) ஆனதினல் பேதகம்ஏ(து)
அம்மானை (23)

### கட்டளைக் கலிப்பா

மானுக் குப்பிணை யாகிநின்றீர்; என்ஈ
மானுக்குப் பிணை யாகி நிற்பீர்; உயர்
தீனுக் குத்துணை யானது போல,எத்
தீனுக்குத்துணை யாகிநிற் பீர்;எழு
வானுக் குள்உறச் சென்றீர்; இயற்சொற்பா
வானுக்கே வரந் தந்தது போல்அடி
யேனுக்கும் அருள் செய்வீர்; மதினவாழ்
வேநற்குங்குமத் தின்புய வள்ளலே. (24)

### வெண்பா

வள்ளலோர்! வள்ளலே மாமதின மாமதினத்(து)
உள்ளமோ ருள்ளமே உண்மையே—விள்ளுமெய்யிற்
றைச்சர ணம்பொருத்துந் தங்கைத்தா யாய்அரவிந்
தச்சரணம் நல்குவிழி தான். (25)

### கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

விழியனந்தம் நந்துளரும் மெய்யலங்கா
ரச்சிறப்பின் மெய்ம்மை காட்டி
சுழியனந்த நந்தனச்செய் திரிந்(து)உலவு
சுனைமதினத் துரைகா சீமே
வழியனந்த னங்கொடுத்து வனசமலர்த்
தாள்நீட்டி மனது வைத்தே
எளியநந்த நந்துமுன்ஆ தரித்(து)ஆளக்
கடன்வைத்தேன் என(து)அன் பாலே. (26)

### ஊசல்

அன்பாய்என் ஈமானைக் காலாய் நாட்டி
ஆனகுரு உபதேசச் சட்டஞ் சேர்த்(து)
இன்பான தீனில்அமை பலகை கோத்திட்(டு)
இச்சையெனும் சங்கிலியை இசைவாய்ப்
பூட்டி
வன்பாகம் இருள்ஓட்டி ஆடீர் ஊசல்!
மதினமா நகர்க்(கு)அரசே ஆடீர் ஊசல்!
முன்பாய்உண் டானவரே ஆடீர் ஊசல்!
முகம்மதுர்-ரசூல்நபியே ஆடீர் ஊசல்! (27)

### கட்டளைக் கலித்துறை

ஊசத் தரிக்கும் புழுக்கூட்டை மெய்யென்(று)
உவந்துநல்லோர்
ஏசத் தரிக்கும் பவமே அகல இருமையிலும்
பூசத் தரிக்கும் அரிபாடும் அம்புயப் பொன்மதின
வாசத் தரிக்கும்மெய் வேந்தரை என்றும்
மறந்திலனே. (28)

### சந்த விருத்தம்

மறைஒ(த) அறியேன் நலவே குறியேன் வழிநாடும்
துறையே தெரியேன் நினைவே உமையே துணைநாடும்
சிறியேன் அறியேன் வெறியேன் எனைஆள்
திகழ்தாளைப்
பிறியேன் மதினு அரசே நபிமார் பெருமானே! (29)

### வெண்பா

பெருமானம் வைத்துச் சுரர்மான் அமைத்து
வரமா னிலம்விட்டு வல்லோன் — கருமானஞ்
சொற்கண்டு சொற்கண்டு துய்த்தமதி னத்தர(சு)உம்
மைக்(கு)என்(று) எனக்கருள்ஈ மான். (30)

### கட்டளைக் கலித்துறை

மானைப் புரந்துபூ மானை நெகிழ்ந்துவல் லாகிறச
மானை அறிந்து சமானைக் கொடுத்துவல் லோன்
சொல்பரி
மானை உவந்(து)இரு மானை மணஞ்செய் மதினர் என்ஈ
மானை நிரப்பும்அம் மானை நிலைவைத்த மாநபியே. (31)

### விருத்தம்

ஏணிப் படிக்குச் சரண்கொடுத் தீர்முன்னம்
எளியேன் விழிக்கிசையவே
ஆணிப் பசும் பொன் பதந்தந்திலீர் காலம்
அறிவீர் நன் மதினுவினுள்
காணிக்(கு) இசைந்தீர் வாரா(து) என் காலங்
கருத்துக்(கு) கிணங்க நேர்மை
ஊணித் தருங்காலம் வருகாலம் நீளில் என்
உள்ளம் நொந்(து) அலைகுவேனே. (32)

## கழிக்கரைப் புலம்பல்

### தாழிசை விருத்தம்

அலைக்குள் ஒதுங்கும் பணிவளையே
அங்கத் தொதுங்கும் பணிவளையே
அடுஞ்சேற் கண்ணே மலங்கினமே
அடுஞ்சேற் கண்ணே மலங்கினமே
நலிக்க அசைக்கும் உள்ளானே
நான்நா அசைக்கும் உள்ளானே
நண்பே வளரும் அஞ்சுகமே
நவ்வே வளரும் மஞ்சுகமே
கொலைசெய் அதிக வலையினமே
கொண்டேன் அதிக வலையினமே
குடைபோல் தணியும் மேல்உடையே
கொசுவங் தணியும் மேல்உடையே
இலகும் படவே சுக்கானே
இச்சைப் படவே சுக்கானே(ன்)
எந்தம் மதினத்(து) அக(ம்)அதுவே
எந்தம் மதிநத்(து) அகமதுவே. (33)

(மடக்கு)

### கட்டளைக் கலித்துறை

அகத்திருக் குந்தவ னற்றூற் குனேருமங் காரகத்தில்
முகத்தி ருக்கும்முளத் தாற்கே மதின முகம்மதுவே
அகத்திருக் குந்தவ னற்றூற் குனேருமங் காரகத்தில்
முகத்தி ருக்குமுளத் தாற்கே மதின முகம்மதுவே. (34)

### வெண்பா

மதுக்காமல் வாசமலர் வாவிமதி னத்தீர்
ஒதுக்காமல் என்ணைஉவந் தாளும்—கதுக்காம்
பனகபர மானமெனப் பட்சம்வைத்த பாதம்
கனகபர மான கதி. (35)

## தவம்

### சந்த விருத்தம்

கதித்த மாடங் களின்மிசை தங்கும்
கொடிக்கு ழாம்அந் தரநதி சென்(று)ஒண்
கார்போன்(று)அற்புத மழைபொழியும்
சார்போங்கல்தடி அடிஇடியின்
கனம்போல்வளர் தினம்சீர்பெறும்
மனங்கூர்மதி னமன்காரணர்
கணத்தி னே(டு)எண் கிரகம் இலங்கும்
படிக்கு நேர்முன் புளநபி சங்கங்
காலாம்பற்கு பி ருண்மரபும்
போலாந்துப்புயர் முஹம்மதர்தன்
கரம்சூரியன் எனும்தீன்முனம்
விளங்கா(து)ஒளிர் தவந்தான்வளர்

பதிற்கு ளேதங் கியபல குன்றுஎன்(று)
இருக்கு மேமுன் புளர்மர பின்பம்
பாசாங்கின்மகத் துவம்இவர்தன்
தீனுங்கதுபொற் கிரிநிகரும்
பரந்தேவரும் சிலம்பாம்எவை
களும்பிதக மெனும்சீருள

பனிக்கு நேர்முன் புளர்சம யஞ்சென்(று)
இருக்கு மேஇங்(கு) இவர்வழி யென்றும்
பார்வாழ்ந்(து)உற்றிட உறைநிகரும்
சீர்ஓங்கிச்சொரி தரவுலகம்
சிறந்தேமிகு மறம்போகவும்
அறஞ்சேர்தர நிறைநதேசெறி

புதுக்கு நீர்குன்(று) உடன்அதி பங்கம்
கரிக்கு நீரென் றவர்வழி யென்றும்
போலாந்தத்துவம் இவர்மரபும்
பாலாஞ் சக்கர மதில்உறையும்
புனந்தானமு தினம்போனிகர்
தருங்கூறுமுன் னரும்பாணிகள்

பொருத்தி லாதங் குடைபடு மங்கண்
டரித்தி டாதங் கவர்கள்தம் வம்சம்
போமான்சித்திர மயில்மடிவின்
பூமான்தற்பர ஒருபொருள்முன்
புகன்றோர்பவம் அகன்றோரிறை
உவந்தோர்இவர் நிகர்ந்தோர்எவர்

துதிக்கும் வேதம் தவநிலை யின்பம்
கொடுக்கும் நேர்தந் திடும்அருள் முன்பின்
தூதாங்கத்தரில் இமையரினும்
போகாங்கொற்றரும் இலைஇறைமுன்
துறந்தோரிலர் இருந்தோரிலர்
தெரிந்தோர்இலர் அருஞ்சீர்பெறும்

சுகிர்தத் துளோர்சுந் தரகுண மிஞ்சும்
திறத்தி ஞேர்பின்(பு) ஒருகுறி தங்கும்
தோளாம்பற்புவி திரையுருகும்
தாளாங்(கு)ஹக்கன்அருள் அஹ்மதர்தம்
சுயந்தான்மலர் உடன்தீன்வழி
விரும்பாதவர் கொடும்பாவியே! (36)

**கழிநெடில்அடி ஆசிரிய விருத்தம்**

பாவியா னவரும்மூ தேவியா னவர்களும்
பாதகத் தினர்களு தீதகத் தினர்களும்
கோவியா னவர்களும் நோவியா னவர்களும்
கொலைகள்பொய் களவுசெய் கொடுமையோர்
அவரெலாம்
வாவிகூ பந்தடா கங்கள்சூழ் மதினமா
மன்னர்என்(று) உன்னினால் எண்ணிலா
வினை அறு
நாவினால் உரைசெய்க கனமும்நன்னேர்பொ(ன்)ஊர்
நயமும்வந் தெய்துமன் னாமம்நா டார்களே (37)

**வேற்றெலி வெண்டுறை**

நாடொறு மேதுயர் நோய்கலி யால்நான்
வாடி அலைந்தினம் மனம்அலை வேனே?
நா(டு)அதில் வளமதி னாவின் வள்ளலே
தாள் துணை யருள்செயும் தவங்கள் நேரவே. (38)

**வெண்பா**

நேரும் புகழும் நிதியும் நினைத்தெவையும்
சேரும் மதினத் திறல்வேந்தர்—கூருந்தாள்
கோகனக நாடுவரும் கொற்றம் புகழ்வோர்க்கு
மாகனக நாடு வரும். (39)

## விகற்ப நடை

### பஞ்ச பங்கிக் கலித்துறை

வருமே திருவே இதமே புகழே தவமே வரும்
அரசே மருமான் மதமே திகையும் கவியும்வர
குருவார் தருமா மதினந் திகழும் நபிசந்திரன்
வருமே அருள்சேர் பதம்எண் சிகைஅணி
வார்பரமே! **(40)**

### கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

வருவது மால்அல மழைஅல மின்அல
வன்பிடி தான்அல்ல
திருஇர சூல்நபி மதினநல் நா(டு)உறு
திறள்வளர் மதமாவாம்
விரிதுளி மாமதம் முகபடம் மின்னாம்
வெடிஇடி வன்தொனியுன்
உரியவன் முன்சொன குறியல அங்குஅவை
உறைவதும் விண்டிடமே. *(41)*

### (வேறு)

விண்தலம் மண்தலமும் வேலை தெரிந்திடினும்
மெய்த்தவன் நண்ணிடினும் விண்ணவர் முன்னி
டினும்
அண்டம் இருந்திடினும் ஆசை நெகிழ்ந்திடினும்
ஆம்!இர சூல்எனவே தாம்உரை யாதவரே
எண்டும் இருப்பிடமே துண்டு நெருப்பழலே
ஏர்பெறும் மாமதினா வாழ்இறை தூ(து)எனவே
தொண்டுசெய் கின்றவருக்(கு) அண்டமும் எவ்வுலகும்
தொழுது பணிந்திடவும் பரகதி வந்திடுமே **(42)**

# தலைவிக்குத் தலைவன் உரைத்தல்

## கழிநெடிலடி விருத்தம்

வந்திடுங் ககனில்ஆ தவன்விடுங் கரமதால்
　　மதிமுகங் குறுவெயர்ப் பாரம்நேர் சொரிமி(ன்)னே!
இந்தவன் தீயிடர்ப் பாலைமுக் கன்னலுண்(டு)
　　இதனைவிட்(டு) ஏகில்அப் பாலும்ஐங் கடிகையே
நந்(து)உலா விவளம் பெருகுமா நதியும்நா
　　ஞவிதக் காவு(ம்)மிக் கானபொற் பேபெறும்
சிந்தைஅன் புறநவம் செய்யுமா நபியுவந்(து)
　　இனிதுவாழ் கருணைசேர் மதிமநா நகரமே. (43)

## விருத்தம்

நகுகதிர் அங்கத் தாரை நால்வழி அங்கத் தாரைச்
சுகமிகுஞ் சொர்க்கத் தாரை துயர்அறுஞ் சொர்க்கத்
　　　　　　　　　　　　　　　　　　　　தாரை
பகுமதி னத்த வரை உயர் பதிமதி னத்த வரை
அகமதுன் பான்மெய்த் தோரே அகமதன் பால்மெய்த்
　　　　　　　　　　　　　　　　தோரே. (44)

## கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

மெய்ம்மைக்கும் இன்மைக்கும் மறுமைக்கு
　　மேகிருபை மிகவேசெய்வோர்
பொய்ம்மைக்கும் வண்மைக்(கு)ம் இணங்காத
　　வேதத்தர் பொறுமைக்குநேர்
செம்மைக்கும் வளமைக் கும் அதிகப்பொன்
　　மதினத்தர் திறமைக்குமா
நன்மைக்கும் மென்மைக்கும் அவர்அன்றி
　　யார்வே(று)இஞ் ஞாலத்திலே! (45)

(வேறு)

ஞாலந் திரைவா னரரும் சுரநா
கருமிந் தரிமற் றவரெவ் வுலகும்
காலங் கிரியைத் தொழும்ஆ ரணகா
ரணகா வலர்மா மதினா வுறைவோர்
ஆலந் தனைஉண் டிடும்வென் றியர்அந்
தம்சந் தம்கந் தம்பொங் கியமெய்க்
கோலஞ் செறிநா யகர்தா யகர்கொற்
றவர்சுற் றவர்மெய்த் தவர்கற் றவரே! (46)

கட்டளைக் கலித்துறை

கற்றூர் சுரர்சமு கத்தார் மதிமுகத் தார்மதின
கற்றூர் குடிர்அகல்அ கத்தார் தவமகத் தார்நதின
கற்றூர் மகிழ்சரி கத்தார் சுவனகற் றார்தரும
கற்றூர் இறைசிநே கத்தார் என(து)அகத்
தார்கதியே! (47)

விருத்தத் தாழிசை

கதிர்மயங்கு மெய்யினார் மதிதவழ்ந்த கையினார்
கஞ்சமா முகத்தினார் தஞ்சமா மகத்தினூர்
அதல்நடத்து நெறியினூர் முதுகிடத்(து)ஓர் குறியினூர்
அறுசில்ஏறு கவுசினூர் பொறுதிமேவு தவிசினூர்
துதிசெய் தொண்டர் அன்பினூர் சதிசெய்அண்டர்
வன்பினூர்
துய்யஆர ணத்தினூர் செய்யகார ணத்தினூர்
மதினம்வைகு மோகரைக் கதிதரும்கிரு பாகரை
மனதுநாடும் மாலையே நினைவதேடும்
வேலையே. (48)

## கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

வேலை உவந்தவர் மின்னை உவந்திலர்
வெஞ்சுரம் நீக்கினர் மெய்ச்சுரம் நீக்கிலர்!
பாலை உவந்தவர் பட்சம் உவந்திலர்
பாதைமுன் ஏகினர் பாவைமுன் ஏகிலர்!
மாலை கொடுத்தவர் மாலை கொடுத்திலர்
மாமதி னத்தினர் மையலை நத்திலர்!
சேலொ(டு) உரைத்தவர் சேயொ(டு) உரைத்திலர்
செய்யிது தான்இவர் செய்வது தானே! (49)

## தாழிசை

தானிருந் துமரி அனம்இருந் துமுகில்
தான்இருந் துமயில் தென்றலும்,
தத்தை மற்றவை இருந்தும்உற் றதுணை
தானும் அல்லஎன(து) அகுமதைப்
போனிருந் துணையை யொத்த மெய்த்துணை
பொருந்தி லா(து)என வருந்தியே,
போன தூதுபிழை போனவன் கொடுமை
போக வாரொடு புலம்புவேன்!
கோன்இ ருந்துநபி மார்த போதனர்
குழாம்இ ருந்தும்ஒலி மார்சபை
கூண்டி ருந்துமதி னத்தர் பொன்னடி
குறித்(து)இ ருந்தது பொருத்தமாய்த்
தேன்இ ருந்தொடையை விட்டுமெய்க் கமல
சேவ டிக்(கு)உளம் இணக்கியே
திரும்பி வந்தில(வி) யாரை நம்புவது?
தேட்ட மேதரும்என் நாட்டமே. (50)

### ஆசிரிய விருத்தம்

மேதினியுளோர் விண்ணுளோர் சகலரும்
மெய்யாய் விரும்பு பாதம்!
மேலான பரன்அறு சினிற்கவுசொ(டு) ஏறியும்
மிதித்(து)ஏகு கின்ற பாதம்!
காதவழி கஸ்தூரி பரவஅடி தோய்ந்திடாக்
காரணம் விளங்கு பாதம்!
காசினியுள் ஊடுருவி வேதன் 'தகுத்ததரா'
கண்(டு)இனிது இலங்கு பாதம்!
ஆதியருள் சேரஅருந் தவர்மனத் தவிசில் விளை
யாடிச் சிவந்த பாதம்!
அருணன்ஒளி தனில்அதிக சோதியின்
பதம்அன்
பருக்(கு)அருளும் மதின வாழ்வே!
பாதைதரு கிருபா கடாட்சவீட் சணபரி
மளக்களப திவ்ய வடிவின்
பற்பச ததளமலர்ப் பாதம்என் விழிதந்து
பட்சம்வைத் துக்காக்க வே. (51)

## புயல் தூது

### வெண்பா

கார்க்குலமே நீங்கள் கவிகைபிடித் தீரானுல்
வாக்குரைப்பீர் மாமதின வள்ளலுக்கு—நீர்க்கடலில்
நாமாவத் தைக்கிணையாய் நாட்ட(ம்)அலைந்
தேன் துயர்க்குப்
பூமாவத் தைத்தருக போய். (52)

(வேறு)

### மடக்கு மொழி

தருமதி னாவில் சகலமுமே தருமதி நாவில் தரணி
பரைப்
பரம சகாயப் பரிவினர்பால் பரம சகாயப் பலன்
அருள்வார்
பெருமையி லாரைப் பிரபலரைப் பெருமையி லாரைப்
பிசகறவே
திருஅக மதுவைத் தெளிவுடனே திருஅக(ம்)அது
வைத்திடுமனமே. (53)

### சந்த விருத்தம்

தினகரன் உவந்த மலரினில் இணங்கும்
சிறைஇலகு வண்டின் நிறையேகேள்!
கனதிபெறு துங்க மதினநகர் எங்கள்
கருணைநபி தங்கள் முனமேநான்
உணவிடின் மிகுந்து மருண்மது வருந்தி
உரைசொலுவை அந்த முறைநீவி
மனதுபயம் ஒன்றி அடிதனை வணங்கில்
வர(ம்)அருள் தங்கி வருவாயே! (54)

### தலைவி இரங்கல்

#### கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

வருவேன் எனவே சொன்னார் முன்னாள்
மாரன் தேரே வருகா லம்பின்
தருமா மயில்ஆ டியகா லம்தான்
தாரா தாரம் பொழியுங் காலம்

உருமா றியகா லந்தா னேவந்(து)
உறைவேன் என்றார் வரல்கண் டிலன்யான்
வரமே தருமா மதிஞ இரசூல்
வரைமே வியமா தேஇப் போதே. (55)

அகவல்

தேவர்எவ் வுலகும் சீவஜந் துக்கள்
யாவரும் போற்றும் அருமறை விளைத்த
மாதவர் மதின மன்னவர் இரசூல்
ஆதியாய் நின்(று)ஒளி ஆகினர்; அவ்வொளி
வித்தாய் முத்தாய் விளைந்தநித் திலத்தில்
சித்திர மயில்எனச் சிறந்தஅம் மஞ்ஞையில்
பரிமளம் வீசும் பலதுளி வீழ்ந்தே
வருதுளி அதிசயம் வகுத்(து)உரைப் பவர்யார்?
விண்ணுமண் உலகும் விரைவுடன் அமையப்
பண்ணிய திவலைப் பதிஞ லாமே;
வானர்கோ னிர்க்(கு)இறை வர்தமன் காலன்
தான்இவர் தமைவகுத் ததுநாற் சீகரம்
அறுசுங் குறுசும் அருள்கலம் லவ்ஹுறம்
உரைநான்(கு) அதனால் உதித்தும் ஆங்கே
இலக்கத்(து) இருபத்து நாலா யிரந்துளி
துலக்கநல் நபிகளைத் தோன்றச் செய்தன
அழகுறு சுவனம்எட்(டு)அமைத்த வேண்டுவல்
தழல்உறு நாகம் சமைந்த வேழாலி
மண்நீர் தீவளி வகுத்தநால் வருடம்
விண்ஊர் கதிர்மதி விளக்கிய திரண்டே
வானர்ஜின் பூதம் மனுச்சரா சரமும்
கான்உறு விலங்கும் கடல்உடுக் கணமும்
ஏழ்வகைத் தோற்றம்நால் இயல்வகைப் பிறவியும்

சூழபல உல(கு)உயிர் தோற்றம்மற்(று) எவையும்
எண்அடங் காமெய் இளகிய துளியால்
வண்ணம் வண்ணமாய் வகுத்துவைத் தனவே
இன்னம் பெருகும் எழில்மயில் வடிவாய்ப்
பின்நபி யாகப் பெரும்புவி உதித்துச்
சகல உயிர்க்குத் தாய்என வந்த
அகம(து) இரசூல் அவர்அடி முடியின்
என்றுமே புகழ இனிதாய
நன்றிதந்(து) அருள்வாய் நாததற் பரனே! (56)

## சித்து

### ஆசிரிய விருத்தம்

நாதாந்த வேதாந்த சித்தாந்தம் அறிகுவேன்
நவகண்ட அகிலாண்டமும்
நாடுமுன மேவிவந்(து) அணுகுவேன் காணுத
நவகா ரணங்காட்டுவேன்!
பூதாங்கு கயம்எட்டை அம்மானை ஆடுவேன்
புணரிஏ ழுங்குடிப்பேன்!
பூச்சக்கர லோகத்தை ஒருகையில் அடக்குவேன்
புதுமையாம் வித்தையல்ல
பாதாந்தம் எழுபூவுள் உருகிமுடி அறுசினில்
பரவு மதி னத்தின் வள்ளல்
பகிரண்ட லோகமும் சுரர்மண்டுள் ளோர்களும்
பதினெண்ணு யிரஆலமும்
காதாந்த மருவீசவ் வொளியில்உண் டானத்தில்
அமையாத அத்தனைத்தான்
கண்டுதரி சனைசெய்து தொண்டுபணி
யொன்றிடக்
காண்கிலேன் இன்னம்நிசமே. (57)

## மறம்

### கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

நின்வேந்தன் முடங்க(ல்)என்றீர் சப்பா ணிக்கோ
 நேர்சேரும் மறவர்குல மின்னைக் கேட்டீர்
மன்வேந்தர் பணிமதின வேந்தர் முன்பாய்
 மானுக்காய்ப் பிணைகேட்போன் வழியில் வந்தோம்
முன்வாய்ந்த(து) என்னவுஞ்சற்(று) அறியீ ரோமின்
 முகிலிடத்திற் கேள்முடங்கல் என்றீ ரானால்
கொன்வீந்த நபிபாதம் வருடில் உங்கள்
 கோமுடங்கல் தீர்ந்துமிகக் குணம்உண்
 டாமே. (58)

### இதுவும் அது

### தாழிசை

ஆம்இதற்கு முன்னர்வந்(து) அனேகராஜர் முடிகள்
 பந்(து)
 ஆடிரத்த வெள்ளமோ(டு) அணிகவர்ந்த மாடமீ
நேமிவங்க மாய்க்கொடுஞ்சில் ஓடமண்ணை பாடமீ
 நேர்எனப் பிணங்களோட யாங்கள்வென்ற(து)
 அறிகிலீர்
சோமனைப் பிரித்தவள்ளல் துய்யவேந்தர் மதினர்தாள்
 தொழு(து)இறைஞ்சி மறவர்பெண்ணில்
 விரகமிஞ்சி யதனையின்
காமதத்து வத்(து)உழன்று விட்டதூதும் மடியும்நாள்
 கண்ட(து)இன்று என்றுவிண்டு கவலுவீர்கள்
 அறியவே! (59)

### கட்டளைக் கலித்துறை

அறிவே தவத்தின் கொழுந்தே அகத்(து)உறை
ஆர்அமுதின்
செறிவே கலைகட்(கு) அணிகல மேதிரு
வாம்மொழியுள்
பிறிவே மெய்ஞ்ஞானப் பெரும்பொரு ளேபெறுஞ்
சீர்மதின
நெறிவேத மாமுத லேஎனை ஆட் கொளும்
நேர்உறவே (60)

### குறளடி வஞ்சிப்பா

உறுபொழிலிடைச் செறிகவியலும்
பாயும்பொழு தாய்எங்கணும்
அற்புதமாமலர் புட்பமாரியைநேர்
உடைந்தகனிகள் வடிந்துசொரிதல்
புய(ல்)துளியெனக் கயத்தினில்உறப்
புதுப்புனல்என வெதுப்பொடுகயல்
வரிவளைவலம் புரிபலஎதிர்
மேய்ந்(து)உலவின வான்கணம்என
அதில்தரளம் கதிர்க்(கு)அளவிடப்
பயந்(து)எழுகயல் உயர்ந்(து)எழுதரப்
பலவின்சுளை குலைவுற்(று)எழ
கூறுமாங்கனித் தேறல்நீங்(கு)உறத்
தேங்கினமிடல் தாங்(கு)ஒடிய
வீந்துகுலை போந்துவிழ
வரம்பைக்கனி பரம்பிற்புகு
விழும்பல்கனி ஒழுங்கில்செல
அதில்இலங்கிய மதுவிரைந்(து)எதிர்

அயல்இலங்கிய வயல்நிரம்(பு)உற
செந்நெற்பயிர் விண்ணைத்தொட
நா(டு)இலங்கிய வீ(டு)உயர்ந் து)எழு
மதிநகர் அதிநாயகர்தமை
அன்புடன் உவந்திட்(டு) அனுதினம்துதிப்போர்
துன்(பு)இடர்கழிந்து சுக(ம்)உறுவாரே. (61

### வெண்பா

வாராரோ செம்பவள வாய்திறந்து சொல்லிமுகம்
பாராரோ மாமதினப் பார்த்திவர்தாம்—சீரார்
விரைத்துருக்கத் தார்மேல் மிகுமாலை கொண்டு
கரைத்துருக்கத் தார்நினைக்குங் கால். (62)

### கட்டளைக் கலித்துறை

காலனைக் காக்கவைத் தீர்அறு மத்தனைக் கைவளர்த்தீர்
கீலனை வஞ்சனைக் கிஞ்சனை ஆளும் கிளர்ந்துஇறந்த
பாலனை உய்யும் படிச்செய் மதினத்(து)என்
பார்த்திவரே
காலனை யாறனைத் தொண்டினை ரட்சியும்
நம்பனையே! (63)

### உயிர் வருக்க அகவல்

அன்னையாய் எவர்க்கும் முன்அமைந் தவரை
ஆதிநா யகன்றன் தூதரா னவரை
இங்கித மறையின் துங்கநே ரினரை
ஈமான் நிறைந்(து)ஒளி ஆமா னவரை
உடுத்தரித் தவரை கடுப்பொசித் தவரை
ஊமைவாய் உரைக்க நேர்மைசெய் தவரை

எண்ணும்நன் மதினத்து அண்ணலா னவரை
ஏகாம் பரரை வாகாம் புயரை
ஐயர்கள் பணியும் செய்யதா ளினரை
ஒப்பிலா தவரைச் செப்பமாய்ப் புகழை
ஓதுவார் துயரம் யாதுமே விலகும்
ஔவலாய் ஆகிருய் ஆகினோர் தமையே! (64)

### மருட்பா

ஏவிரண்டும் வில்லொன்றில் எய்வதுவுஞ் செங்கமலப்
பூவிரண்(டு)ஓர் பைந்தாளில் பூத்ததுவும்—நாவிரண்டு
பூவில் உரையாப் புகழ்மதி ஞவினர்
காவரை மாது ககனப்
பாவை யதலதாள் பரவுங்கண் ணிமையே (65)

### தாழிசை

மையிருட்டை விலக்கிவிட்டவர்
மன(து)இருட்டை விலக்கிலார்
மான் அழுங்துயர் நீக்கினுர்நிணே
மான் அழுங்துயர் நீக்கிலார்
தையலுக்(கு) அணி தந்தமுரலர்
தையலுக்கணி தந்திலார்
தாரையேதணி கையினுர்விழித்
தாரையேதணி செய்திலார்
பைஅராவை நிறுத்திவென்றவர்
பகைஇராவை நிறுத்திலார்
பாவமாசை யகற்றுகின்றவர்
பாரமாசை அகற்றிலார்

வையகத்(து)உயர் சோதியார்ஒரு
மாதவத்துயர் சோதியார்
மதினநாயகர் இதுசெய்தான்
மகள் மதின நா(வு)எது செய்யுமே. (66)

## கேசாதி பாதம்

### கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

மேகம்வாள் சிலைவேல் வள்ளைஎள் பூவான்
விதுமணி கொவ்வை நந்தாம்பல்
வீணையே காந்தள் சூற்கெளிறு அரிவாய்
வெற்பா லிலைவியன்எறும்(பு) ஊர்கை

ஏகுநீர்ச் சுழிநூல் அரவரம் பையும்ஞெண்(டு)
இருவரால் ஆமை கந்துகமும்
இயற்சிறு குரும்பை துகிர்பிறை வனசம்
எழில்நபி மதினநாட்(டு) இலகும்

தோகையர் குழல்மத் தகம்புரு ரங்கண்
செவியொடு துண்டம் ஆனனம்பல்
துணைஇதழ் கண்டம் தோள்கரம் அகங்கை
சூழ்விரல் உகிர்முலை உதரம்

வா(கு)உறு ரோமம் உந்திநுண் இடையும்
வடி(வு) அகல் ஊரும் சாணகணைக்கால்
வன்குதி பரண்டை விரல்நகம் சரணம்
ஆகுமுன் வகுத்ததற் கிணையே! (67)

### வேறு

இணையாய்எண் ணரிதான மனுவோரில்
நபிமாரில் இமையோர்களில்
துணையான உவமானம் இலைஏதை
எதிர்ஈடு சொலுவேன் ஐயா!
வணகோல வளைஈனும் அணிகாவின்
மதுவோடி அதனல்விளை
பணமேவும் மதினாவின் அரசேபூ
பரராசர் பணிபாதரே! (68)

### வஞ்சித்துறை

பாதரே அறுசிலேறிய
நாதரே மதிஞவளர்
வேதரே இறையோன் அருள்
தூதரே மகுமூதரே! (69)

### கழிநெடில் ஆசிரிய விருத்தம்

மூதறி(வு) உவந்து யோக
முதல்நிலை கடந்து ஞானப்
பாதையை அறிந்து முப்பாழ
பரநிலை வெளியைத் தேர்ந்து
நாதனைத் தெரிந்(து)ஒன் றுய்நான்
நற்றவர் குழாத்திற் கூட்ட
ஆதர(வு) உமையல் லா(து)ஆர்
அருள்செயும் மதின வேந்தே! (70)

## சம்பிரதம்

### ஆசிரிய விருத்தம்

தேயமெல் லாம்மகிழும் மதுமூது நபிவாழ்
திருப்பள்ளி மதிஞவிலே
சென்றனம் அதில்வரும் தீஞேர்கள் யாரென்று
செப்பிஞர் சித்தன் என்றேன்
தூயதோர் வித்தைபல என்னென்ன அறிகுவாய்
சொல்என்ற போதில் யானும்
தூதாங்கர் இரசூல்என் வித்தைதனே
அறிகுவார்
சொல்லுவேன் உங்க ளுக்கு!
காயமுறு சோமனே அழைப்பேன் அத்தத்திஞல்
கருதுதீன் பயிர்வி ளேப்பேன்
காயுஞ் சுரந்தணிப் பேன்கை அமுதத்திஞல்
கலேகள்பல தான்அறிகுவேன்
நேயமேதெரிகின்ற சிற்றறிவன் என்னுடைய
நிலேபரம் அறிந்தவர் கள்ஆர்?
நீள்என்றன் வித்தைக்கு நேர்என்ன காணும்
என்
நிலேயறிவர் யாவர் தாமே. (71)

## குறம்

### தாழிசை

யாவும் உணர்ந்த குறத்திநான்
அகத்தில் நினேத்தது சொல்லுவேன்
தேவையின் நாடிய வர்க்(கு)அருள்
செய்மதி ஞநகர் வாசரை

ஆவ றல் அடி தோயவே
கம(த ாண்ணுவ(து) உண்( ரு
காவல அவன் அரு ளாலேயே
காணுவை நம்இர சூலே. (72)

### வெணபா

ஏகபரன் ஆதி முதல ஈறுநடு வானவனை
ஏகம திலஅறியா அன்பருக்கு—மோக
மனத்(து)இருட்டைப் போக்கி மதிறு மனதர்
சனத்திருட்டை நீக்கிவைக்கும் தாள். (73)

### கட்டளைக் கலித்துறை

தா ா முடிபொம்மை காதை கண வெப்புகல க்
கேளாச் செவிகற் றுணைவணங் காத கெடு ன மை
பாழாம் பிளைநவம் பாடாத நாமரப் பட்டைவிளைபுத்
தேளார் வணங்குந் திருமதி ஞுவினர் செஞ்சரணே. (74)

### தாழிசை

செஞ்சொல் புகத்தாரும கஞ்ச முகதத்தாரும்
திருபுவ னத்தாரும் குறிபவனத்தாரும்
ஞ்சு கவி த்தாரும துஞ்சல் தவாததாரும்
வா னுரை நின்றாரும வானிரை சென்றாரும்
வஞ்சக(ம) புற்றாரும் நெஞ்சுரம் உற்றாரும்
மறையை விளைத்தாரும் பிறையை த்தாரும்
ஞ்சல அற்றாரும் நம்சமூ கத்தாரும்
தருமதி னத்தாரும் திருமதி னத்தாரே. (75)

## சித்து

### வேறு

தாரும் புயற்குந் திறற்செங்கை மதினத்
தார்எங்கள் இரசூல்கை ரசவாதம் ஒன்றுண்(டு)
ஆர்வெங் குபிர்ச்செம்(பு) அகத்துநல் தீனின்
அனல்மூட்டி வேதச் சரக்கினைக் கட்டி
பார்கொண்ட கலிமா எனுங்குருவை விட்டுப்
பண்பா உருக்கப் பளீரென்(று) இலங்கிச்
சீர்அண்ட லோகங்கள் முழுதும் பரந்து
செகசோதி யாய்நின்று தெளிவுற்ற பொன்னே.(76)

### வெண்பா

பொன்ஆசை பெண்ஆசை பூஆசை மூஆசை
என்னாசை என்னாசை என்செய்வேன்—**கன்னாசைப்**
போக்குமதி னத்தாரைப் போற்று(ம்) அடி
யார்க்(கு) அடிமை (77)
ஆக்குமதி னத்தாரை யா.

### கட்டளைக் கலித்துறை

ஐயருக் கையர் பணிமதி னத்(து)அர
சையரைமூங்
கையரைச் சொல்லச்செய் கையரை மால்கவி
கையரைத்தோ
கையரை யேயறுங் கையரை ஒட்டுவ
கையரைவெங்
கையரை யேமரு கையரென் றூளருங்
கையருண்மே. (78)

### விருத்தத் தாழிசை

அருபிளந்த உருபிளந்த ஆதிமுன்பில் ஏகவிண்
அதுபிளந்து திரைபிளந்த அறுசிலேறு குறுசிலே
பரிபிளந்த வரிபிளந்து படைபிளந்து சிர(சு)உடல்
பலபிளந்த விபுனியந்த னும்படத்திண் மகுடமும்

சரிபிளந்து மெய்பிளந்து தந்தியும் பிளந்தபூ
தலம்அதும் பிளந்துவானர் தலைவர்தாங்கு சிறகதின்
திரள்பிளந்து விடவும்வாள் செலுத்தும்ஆலி மாதுலர்
திருநடஞ்செய் மதினமே செழிக்கவந்த நாதரே!(79)

## தலைவி இரங்கல்

### கலிச் சந்தவிருத்தம்

நாதந் தொனித்தெண் டிருச்சேவை
மதிஞ நகர்க்காதிபர்
பாதங்கள் மீ(து)ஆசை தந்தார்
விரும்பப் பதந்தந்திலார்
தூ(து)அங்(கு) உறுங்கொண்டல் கான்வெற்பில்
விண்மாரி சொரிகின்றபோல்
தா(து)ஒன்று முலைமீது கண்மாரி
சொரியத் தருங்காதலே. (80)

## மதங்கு

### கழிநெடிலடி விருத்தம்

காதம் மணம்கமழ் உற்றூர்
    காரணி கங்கள் விளைத்தார்
நீதிகொள் மாமதி னத்தார்
    நேர்சர ணந்துதி யுற்றே
நாத மதங்கி படித்தால்
    நாகம் இரும்புரு கச்செய்(து)
ஓதுவன் இன்புற யாரும்
    ஓசைகள் கேளும் இருந்தே. (81)

### தாழிசை

இருளை அழைத்தோர் மருளை ஒழித்தோர்
    ஏவல் உவந்தோர் பாவம் இகந்தோர்
வரையொ(டு) உரைத்தோர் நிரையொடு சொற்றோர்
    மாறு தடுத்தோர் பேறு கொடுத்தோர்
மருவுரு வத்தோர் திருவருள் பெற்றோர்
    மறைமுத லானோர் பொறைநெறி யானோர்
அருமதி பெற்றோர் வரமதி னத்தோர்
    அடிதொழு வீரே மிடிகழி வீரே' (82)

### கழிநெடிலடி விருத்தம்

கழிப்பதெக் காலம் பவத்தைக்
    கடப்பதெக் காலம் துயரக்
        கடலில் மூழ்கல்
ஒழிப்பதெக் காலம் கவலை
    உயர்திருத் தாள்கொடுத்(து) உங்கள்
        ஒளிசேர் கண்ணால்

விழிப்பதெக் காலம் தொழும்பன்
விடிவதெக் காலம் தாளம்
விளங்க ஆற்றில்
சொழிப்பதெக் காலும் மதினக்
கோவே நற்குறை சிக்குலக்
குருவென் பீரே. (83)

## மடக்கு

### தாழிசை

குருமுத்தில் உவந்தானிறை குருமுத்தி லுவந்தோர்
கொற்றத்தை யெடுத்தார்பணி கொற்றத்தை
யெடுத்தார்
திருவானவர் முதலோர்பணி திருவானவர் முதலோர்
செவ்வாய்மொழி மறையார்துகிர் செவ்வாய்மொழி
மறையார்
தருமத்துரை யானோர்மலே தருமத்துரை யானோர்
சமதானவ(ன்) ஒளியார்கனி சமதானவ மொழியார்
மருவுற்ற சடத்தார்பர மருவுற்ற சடத்தார்
மதிஞமுகம் மதுவேஎனின் மதிஞமுகம்
மதுவே! (84)

### வெண்பா

முகத்தாட் சணையாக முன்ஒன்று பின்ஒன்(று)
அகத்தாட்சி சொல்கூட்டத் தாரில்—புகுத்தாமல்
ஆட்கொள்ளு மே! மதினத்(து) ஐயா உமதுதிருத்
தாட்கொள்ளு மேஎன் தணே. (85)

### கட்டளைக் கலித்துறை

எந்தங் கடர்துன்பம் முன்பின் பவஞ்சென்
றிடும்படிநேர்
தந்தன் புவந்தஞ்சல் தண்கண் புரிந்துங்கள்
தஞ்சம் வைப்பீர்
சந்த்ரன் பதங்கன் றடங்கண் டொதுங்குந்
தண்டாமதினஞ்
சொந்தம் பெறுந்தன் தொழும்பன் கணங்கண்
சுமந்தவனே. (86)

### கொச்சகக் கலிப்பா

தவம்உடையவர் பலகோடி சததளமலர் அடிநாடி
கவனம்உள்ளோர் அகமீதே கருணைசெய்தாள்
மகுழுதே
நவமுகில்கோ புரமதிலே நடமிடலான் மதியாரை
திவியமர கதமெனவார் திகழ்மதிறு வரபதியே! (87)

### வஞ்சி விருத்தம்

பதியே மதிறு
நிதியே மனதில்
துதியே உயர்தாள்
கதிவே(று) இலையே! (88)

### கழிநெடிலடி விருத்தம்

இலையென்(று) ஒருவ ரிடம்இயல்சொற்(று)
இலையென் றிடவுள் ளகம்மெலிந்து
வலையொன் றியமான் கயல்எனவும்
வருத்தா(து) உங்கள் திருத்தாளைத்

தலைஒன் றவும்ஈங் தால்கவலை
 தாழ்வு தணியுந் தனைக்காணும்
நிலையொன்(று) அறிவேன் கதிசேர்வேன்
 நிதியே மதினப் பதிவேந்தே! (89)

### வெண்பா

வேந்தே உவந்தவர்கள் மெய்ப்பொருளின்
 உட்பொருயாய்ச்
சாந்தருள் செய்மதி னத்தரசே—நீந்தாத
பாவக் கடலுள் பதிந்தவனை வங்க(ம்)நிகர்
காவத்தூக் குங்கைக் கருத்து. (90)

### தழை

### கட்டளைக் கலித்துறை

கருவில் தழைக்கும் படியமைத் தோன் தன்
 கருணையினால்
மருவில் தழைக்கும் மதினர்எங் கோன்நபி
 வாசமலைத்
திருவில் தழைக்கு(ம்)மா வன்புடை யாய்செம்பொன்
 ஊரில்எங்கும்
தருவில் தழைக்கும் நறுந்தழை தண்டழை
 தாம்இவையே! (91)

### பாண்

### தாழிசை

இவன்மாதர் மகிழ்வாக இசையாழ்சொல் பாணா
 இனிதாக வேதூகை முலையுண்ட வள்ளல்
தவம்நேர்மை மதினாவில் இறசூலுல் லாஹ்மேல்
 சங்கீத மேசொல்வர் சிங்கார மாகப்

பவமேகும் அழல்மீது மெழுகாவர் கேட்போர்
பாருந்தன் நாதங்க ளால்ஒன் றும் இல்லை
அவமேசெய் தேதீன்த னக்(கு)அலைந் தாய்நீ
அங்(கு)ஏகில் நல்தீனில் அடைவாய்சொன்
னேனே! (92)

## மடக்கு

### கலித்தாழிசை

அலைதரு சிந்தை அலைதரு சிந்தை
ஆரம் எறிந்தாய் ஆரம் எறிந்தேன்
கலைமதி பெற்றாய் கலைமதி பெற்றேன்
கண்ணை உறங்காய் கண்ணை உறங்கேன்
சலமது கொண்டாய் சலமது கொண்டேன்
சஞ்சலம் உற்றாய் சஞ்சலம் உற்றேன்
நிலைமையர் மதிநா நிலைமையர் தனையே
நேய விரும்பல் நின்னுடன் யானே! (93)

### வெண்பா

யான்முடியி லேயணிய ஆசைதரும் மாமதின
ஞானிகரை யேமனதில் நாட்டியே—தான்நிதமும்
ஆசைமிஞ்சித் தான்நினைந்துற்(று) ஆகம்அன்புற்
றேனெகிஞ்சத்
தாசன்வந்தித் தேவணங்கத் தாள். (94)

### கட்டளைக் கலித்துறை

தாளைக் கதியென்று தான்நம்பி னேன்சஞ்
சலம்தவிர்த்திட்(டு)
ஏழைக்(கு) இரங்கிக் கிருபைக்கண் பார்ப்ப(து)எப்
போது அறியேன்
சாளையப் பட்டுத் தவிக்கின்ற பாவிக்குத்
தஞ்சம் வைத்திட்(டு)
ஆளக் கடன்மதி னத்தர சேஅணை
வோர்க்கணையே. (95)

## நாற்றூது

### கழிநெடிலடி விருத்தம்

அனத்தைவிட் டேயான் அனத்தைவிட் டேன்அம்
போருக அலர்ச்சரண் அடுத்த
தினத்தைவிட் டேவண்(டு) இனத்தைவிட் டேன்மாத்
திருவடி மலரிணை அடைந்த
கனத்தைவிட் டேன்மைக் கனத்தைவிட் டேன்போய்க்
கவிகையே பிடித்(து)இருந் ததுவாம்
சினத்தைவிட் டோர்பால் மனத்தைவிட் டேன்மதி
னத்தர்முன் அடுத்தன திருவே. (96)

### தாழிசை

முன்னவன் சிலத ராகவே அருகில்
மொழிபகர்ந் தும்உல கங்களும்
முடிவி லாதபல சீவசெந்(து) எவைகள்
முற்றினுக் குமணை யாகினீர்!

பின்னும்நன் னபிகள் பிள்ளைநம் பியொடு
பேர ளுகியும் இமாமதாய்ப்
பேர்தரித்(து) உபயர் மருகரா கிஇரு
பேர்த மக்குமா துலருமாய்
இன்னமும் இருவர் பேரராகி யும்எவ்
உலகுளோர் குருவும் ஆகியும்
இனியஆண் டவரும் ஆகினீர் எவர்கள்
தமைஈடேற அருள் செய்வதால்!
நன்ன யத்தில்நினை வோர்அகத்(து) ஒளிசெய்
ராசரே மதின வாசரே!
நாவினல் உமது புதுமை வல்லமையை
நவிலயா ரும்இலை நாதரே! **(97)**

**சந்த விருத்தம்**

நாதம் மேவுகிர் பாகர்
வேதம் ஓதிய வாய்மை
ஞான மோனசொ ரூபர்
நாகரீக வாகையாளர்
ஆத மேமுத லான
தூதர் யாரினும் மேன்மை
ஆமி ளுதவப் பாலர்
ஆதிமீதில் ஆசை பூணும்
மாதர் வாழ்பதி லோகம்
யாவும் ஓர்குடை நீழல்
வாழு வோர்மதி ளுவின்
வாசர்நேசர் ராசர் நாடும்
காத லானவர் மீது
பாத மேஅருண் மோகர்
காமி லானகு லேசர்
காரணீக ரான சோதியே. **(98)**

## சம்பிரதம்

### ஆசிரிய விருத்தம்

ஆனையெட் டுங்குடத் தினில் அடைப் பேன் எழு
அண்டமது கையும் வைப்பேன்!
ஆறேழு மலையைக் கையேந்தி வருவேன்
அயந்தனை வெள்ளியாக் குவிப்பேன்!
பூனைதான் பானையைம் பிட்டுப் பொசித்துநான்
போகச் சொல்வேன் எறும்பைப்
புனிதமுடன் எழுகடலை யுண்டிடச் செய்வேன்
அம்
புலியை வாளால் வெட்டுவேன்!
தான்என் விரலால் பரிதியைத் சுற்றி எறிகுவேன்
தகுமான வான்மீன் களை
தாள்கோவை யேசெய்து மாலையில் தெரிவைப்
பேன்என் சமர்த்தி(து) அல்லால்
ஞானபோ தகமதின நாதர்கா தங்கமழு
நானதே கத்தா நவமே
நவிலுதற் கரியதென் இரசூல் சரணம் நாளுமே
நாடியறி யாச் சித்தனே! (99)

### யானை வீதிச் சதுரங்க வெண்பா

மதிதுதி னாடி வரனா முனிற் சொ
லதிமுகங் காணவங்தோ ராக—மதிசயஞ்செய்
சோதிசம் மதிம்படிக்கா கச்செய்சம தும்மகுமு
ஞதிமதி ஞமுகம் மது. (100)

### சோம சூரிய வீதிச் சதுரங்கக் கலித்துறை

மதிமுக மெய்மறி யேகமழ் ஆரண ரேமதமே
விதிசம தான தயவால் உமக்கீ யவிழும்மெய்யீர்
துதிசெங் கமலப்பதமு மனம்அவை துன்(பு)அறவே
முதிய மறையறி வோது மதின முகம்மதரே! (101)

# பாடல் முதற் குறிப்பு அகராதி

